தியாரும்பாவ்விய மென்கத்தனித் தனித்
(௬) தாயாராகியுந் தந்தையராகியும்
வந்திலாதவ ரில்லையானவர்
தந்தையராகியுந் தாயராகியும்
வந்திராதது மில்லைமுந்து
பிறவாதிலனு மில்லையவ்வயின்
இறவாதிலனு மில்லைபிறிதில்
எனைத்திறவுயிர்களு மில்லையானவை
தமைத்திறத்தொழிந்தது மில்லையனைத்தே
காலமுஞ்சென்ற தியானிதன்மேலினி
இளைக்குமா றிலனேநாயேன்
அந்தரச்சோதியின் னஞ்செழுத்தருவிலும்
தந்திரம்பயின்றது மிலனேதந்திரம்
பயின்றவர்ப்பயின்றது மிலனேயாயினும்
இயன்றதோர்பொழுதி னிட்டதுமலர்ச்
சொன்னதுமந்திர மாகவென்னையும்
இடர்ப்பிறப்பிறப்பெனு மிரண்டின்
கடற்படாவகைக் காத்தனின்கடனே. (எ)

வெண்பா.

கடலானகாமத்தே காழ்வார்துன்பம்
அடலாமுபாயமறியார் — உடலாம்
முழுமலத்தைத்தோயார்கொலாமுக்கட்பெருமான்
கழுமலத்தைக் கைதொழாதார். (அ)

கட்டளைக்கலித்துறை.

தொழுவாரிவல்வலோ தோற்ப ாளிவனி டோக்கேயலிரவொன்
டெழுவாளெழுகின்றதென்செயவோவென்மனத்திருந்து

கழுவாமணியைக் கழுமலவாணனைக் கையினிற்கொண்
மழுவாளனைக்கண்டுவந்த தென்றலார்வஞ்சியிலையே (கூ)

## இணைக்குறளாசிரியப்பா.

வஞ்சியில்காட்சி யிசைநனிவிளங்க
முன்னணிகழ்ந்த பன்னிருக்கத்து
வேறுவேறுபெயரி னூறின்றியன்ற
மையறுசிறப்பிற் றெய்வத்தன்மைப்
புகலிநாயக விகல்விடைப்பாக
அம்மனாண்டென்றோ ருமையாள்கொழுந
குன்றுகுனிவித்து வன்றோளவுணர்
மூவெயிலெரித்த சேவகத்தேவ
இளநிலாமுகிழ்க்கும் வளர்சடைக்கடவுணின்
நெற்றியிற்சிறந்த வொற்றைநாட்டத்துக்
காமனைவிழித்த மாமுதல்வ
வானவரறியா வாதியானே
* கல்லாவுளத்திற் புல்லறிவுதொடர
மறந்துநோக்கும் வெறுந்தண்ணட்டத்துக்
காண்டொறுங்காண்டொறு மெல்லாமியாண்டை
யாயினும்பிறவு மென்னதும்பிறரதும்
ஆவனபலவு மழிவனபலவும்
போவதும்வருவது நிகழ்வதுமாகித்
தெண்ணீர்ஞாலத்துத் திரண்டமண்ணினும்
எண்ணில்கோடி யெனப்பலவாகி
இல்லனவுளவா யுள்ளனகாணுப்

* சடமாகிய வுடம்பெனக்கொண்டு, "கல்லா வுடம்பெனவும் பாடமோதுவர்.

பன்னாளிருள்வயிற் பட்டேனின்னும்
அன்னதாதலி னடுக்குமதெனினின்
கட்புலன்றெரியாது கொட்புறுமொருவற்குக்
குழிவழியாகி வழிகுழியாகி
ஒழிவின்றான்றி ஒன்றுதமொறி
வந்தாற்போல வந்ததெந்தைநின்
திருவளர்நாட்டங் கருணையிற்பெறலும்
யாவையுமெனக்குப் பொய்யெனத்தோன்றி
மேவருநீயே மெய்யெனத்தோன்றினை
ஓவியப்புலவன் சாயல்பெற்றெழுதிய
சிற்பவிகற்ப மெல்லாமொன்றில்
தவிராதுதடவினர் தமக்குச்
சுவராய்த்தோன்றுந் திணிவுபோன்றனவே. (க0)

வெண்பா.

எனவேயெழுந்தா ளென் செய்கிற்பாளின்னம்
சினவேறுகாட்டு திரென்னு மினவேகப்
பாம்புகலியாதிமிரும் பன்னுச்சடைமுடிநம்
பூம்புகலியாளி தழிப் போது. (கக)

கட்டளைக்கலித்துறை.

போதும்பெறுவிடிற்பச்சிலையுண்டுபுனலுண்டெங்கும்
ஏதும்பெறுவிடிநெஞ்சண்டின்றேயிணையாகச்செப்பும்
சூதும்பெறுமுலைப்பங்கர்தென்றோணிபுரேசர்வண்டின்
தாதும்பெறுதவடித்தாமரைசென்றுசார்வதற்கே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

திருக்கழுமல மும்மணிக்கோவை
முற்றிற்று.

கணபதி துணை

# ௪-வது. திருவேகம்பமுடையார் திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

## கட்டளைக் கலித்துறை.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுனைப்போற்றுகின்ற
வித்தொண்டனேன்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே. (க)

ஏகம்பனேயென்னையாள்பவனேயிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்கரவம்
நாகம்பொன்னாரமென்னப்பொலிவுற்றுநன்னீறணிந்து
மாகம்பொன்மாமலையொப்பவனேயென்பிழைதரித்தே. (உ)

தரித்தேன்மனத்துன்றிகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முரல்கச்சியேகம்பனேயென்றன்வல்வினையை
யரித்தேனுனைப்பணியாதவரேழைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே. (௩)

தெளிதருகின்றதுசென்றென்மனநின்றிருவடிவ
மளிதருகின்னருட்கையினியிலையந்திச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகந்தவர்தாள்
தளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே. (௪)

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாகக்கச்சியேகம்பத்தின்
புற்றுகந்தேறுமுகந்தலைவிட்டநாகக்கச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றிணையடியே. (௫)

அடிநின்றசூழல்கோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றருண்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலின்
னிடிநின்றருஞ்குரலேற்றுடையேகம்பயாமெவ்வணே
வடிநின்றருலப்பண்டையுண்டையாவையவ்வண்ணங்குவதே. (௬)

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோ
ரிணக்கன்றிமற்றோரிணக்கறிவோமல்லுமல்லநின்
குணக்குன்றவில்விகுளிர்கச்சியேகம்பம்பாடினல்லாற்
கணக்கன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே. (௭)

நலந்தரநானென்றுசொல்லுவன்கேண்மின்னல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகைதொழுநீரி
சலந்தரனாகமொழிக்கலைவத்தாய்த்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்தாயென்றுபூசித்துநின்மின்களே. (௮)

மின்களென்றார்சடைகொண்டவென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெள்ளிப்பொடிதம்பொன்னடிபூண்டுகொண்டு
இவன்களென்றாலும்பிரிந்தறியார்கச்சியேகம்பத்தான்
றன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே. (௯)

தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மயிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மையிற்சாயுமருங்குலுங்காதல்விளைத்தனவே. (௰)

தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்
மனம்விட்டகலாம்பிறக்கச்சியேகம்பர்வரின்கயிலைச்
சினம்விட்டகலாக்களிறுவினவியோர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதும்பூங்கொடியே. (கக)

பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்ததுமிக்கயிலைமெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனையாரணங்கேபட்டர்கல்லருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே. (கஉ)

வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவுங்
கருத்தந்தரிக்குநடக்கவின்றையகழனினையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்க்கயிலைத்
*திருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே. (கங)

எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பரெழிற்கயிலை
யும்மையுமானிட்டிப்புனத்தேவிட்டுவந்தனமந்திர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வவென்றோ
வம்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே. (கச)

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்குமிவரையருறுத்தியெய்ய
வெருணக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவ்வியகத்தே. (கரு)

வையார்மழுப்படையேகம்பர்கோய்மலைப்புனத்து
ஐயார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடிகொங்கைகளிருப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே. (கசு)

* திரு—ஆராய்ச்சி, ஈறுகுறைந்த முதனிலைத் தொழிற்பெயர்.

பேசுகையாவருமைக்கண்ணியாரென்றுபித்தொழிக்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர்பொழிற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும்பரிசலரா
கூசுகையாதமிலோர்க்குலவேந்தைக்கும்பெயர்- *நம்மையே (௫௯)

பெயராநலத்தெழிலேகம்பனார்பிறைதோய்கயிலைப்
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
றுயரால்வருந்திமனமுமிங்கோடித்தொழுதுசென்று
தயராதுநையும்வெற்பற்கடியுற்றும்விடைதமினே (௬௦)

†நம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்நாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர்மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
யெம்மைக்கவலைசெய்தசொல்லியோவல்லியெய்தியதே. (௬௧)

இயங்குந்திரிபுரமெய்தவேகம்பரெழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காண்டயிலாட்டருவித்தடங்காண்
முயங்குமணியறைகாண்மொழியீரொழியாதுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னேற்சென்றசூழல்வகுத்தெமக்கே. (௬௨)

வகுப்பாரிவர்போன்மணத்துக்குநாண்மணந்தன்னொடின்ப
மிகுப்பார்களாருயிரொன்றுமிருவர்க்கிள்ளக்கள்வாய்
நெருப்பான்மலர்கொண்டுநின்றாரிடைக்கயிலாவேகம்பர்
தொகுப்பான்மணிசெந்திருவிக்கயிலையிற்சூழ்புனத்தே. (௬௩)

புனங்குழையாதென்றுமென்றினைகொய்ததும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரியநமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருங்கண்கனிபண்பலபாடித்தொண்ட
ரினங்குழையத்தொழுமேகம்பர்க்கயிலாயத்துள்ளே. (௬௪)

---

* நமக்கே-என்றும் பாடம். †தம்மைப் பிறவிக்கடல் கடப்பிப்பவர் தாம்-என்றும்பாடம்.

துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்துநீலமும்மண்டத்துமின்
புணைத்தாலனசடையுந்திருமுக்கணும்பெண்ணொர்பக்கத்
தணைத்தாரெழிற்கம்பரெங்கள்பிரானார்க்கழகியவே. (௩௫)

அழகறிவிற்பெரிதாகியவேகம்பர்தத்தார்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தம்மைப்பற்றலர்பற்றுமன்பின்
குழகறிவேற்பினுள்ளான்றறியாரறியாமைத்தெய்வங்
கிழகெறியப்பட்டலந்தாருலகிற்கிடந்தனரே. (௩௬)

கிடக்குமொருபால்வரைக்கின்றபாம்பொருபான்மதியக்
தொடக்குண்டிலங்குமலங்குந்திரைக்கங்கைகூடுங்கொன்றை
வடக்குண்டுகட்டத்தலைமாலைவாளான்மலைந்தவெம்போர்
கடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே. (௩௭)

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலாமதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலாள்
மற்றைத்திசையின்மணிப்பொற்கொழுந்தத்தாங்கழுநீர்
தெற்றிப்பொலிகின்றகூட்டழகாகித்திகழ்தருமே. (௩௮)

தருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேற்
திருமலர்க்கண்பினவின்றிகழுந்தழல்செல்வக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கனிமகத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்த்தோன்றுமலர்க்குழலே. (௩௯)

மலர்ந்தபடத்துச்சினியங்கினுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலங்கலக்காதினிலாடிவரும்
கலந்திருநீள்வயிரம்வெயிற்பாயுங்கமணிகள்
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர்காதிடமே. (௪௰)

காதலைக்கும்வலதீதோள்பவளக்குன்றமங்குயர்ந்தி
போதலைக்கும்பனிப்பொன்மலைநீற்றின்பொலியகலந்
தாதலைக்குங்குழல்சேர்பிணைத்தோணறுஞ்சாந்தணிந்து
சூதலைக்கும்முலைமார்பிடமேகம்பர்சுந்தரமே. (௬௧)

தரம்பொற்பழியும்முல்கட்டியெய்த்துத்தாந்தளரா
வரம்பொற்புடையதிருவயிறும்வல்லும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தரத்திபூண்முலையு
நிரம்பப்பொருதுதளரிளவஞ்சியுநேருடைத்தே. (௬௨)

உடைப்புலியாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்றுமரைவலமற்றையல்குற்
இருடக்குறுகாஞ்சித்தொடுத்தவரிசிலைதானுண்டுகி
லடற்பொலியேறுடையேகம்பமேயவடிகளுக்கே. (௬௩)

அடிவலப்பாலதுசெந்தாமரையரத்தகிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரி
னடியிடப்பாலதுபஞ்சுறவுஞ்சுஞ்சிலம்பணிந்து
வடிவுடைத்தார்கச்சியேகம்பமேயவர்தருக்கே. (௬௪)

தருக்கவற்றுன்மிக்கமுப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றோடமிழுவாள்விசைத்ததுநெற்கென்றும்
பருக்கவற்றுங்கச்சியேகம்பர்த்தர்தம்பாம்புகளின்
திருக்கயிற்றுலிட்டுருளுங்கடகத்திருக்கரமே. (௬௫)

கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவனிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புரம்போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுமெல்லியுமாநடமே. (௬௬)

சிறுபலபேசிச்சதிர்சான்டந்துவியங்குறைக்
குறிபலயாடிக்குளிர்கச்சியேகம்பனையங்கொள்ள
நெறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவிற்
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடவே. (௬௩)

தேடற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்மூடி
கூடற்றிலகுழல்கொங்கைபொடித்திலகூறுமிவண்
மாடற்றிலமணியின்மடவல்குலுமற்றிவள்பா
லூடற்றிலவெழிலேகம்பனார்க்குள்ளங்கிட்டதே. (௬௪)

கல்லும்புகழ்க்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றைக்குமைத்தவெங்கூற்றங்குளிர்தில்லைகண்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடன்
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே. (௬௫)

மலையத்தகத்தியனர்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையைத்தன்பைம்பொன்மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்
மலையத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே. (௬௬)

மணியாரருவித்தடவிமயங்குடக்கொல்லிகல்லின்
றிணியாரருவியிணர்த்தசிராமலையுவனங்க
ளணியாரருவிகவர்கிளியோப்புமின்சாரல்விந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே. (௬௭)

பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றிமயங்குமயங்குன்றமவில்லார்
நெருப்பதங்காகுதிநாளுமயேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகந்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே. (௬௮)

* இறைத்தார்புரமெய்தவில்லிமைநல்லிமவான்மகட்கு
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ்செங்குன்றமன்றாற்குன்று
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக்குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே. (௫௯)

கூறுமின்றொண்டர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடிதிருத்தோணிபுரம்பழன
மாறுமின்போர்ச்சடைவைத்தவனூரிடைமருதென்
றேறுமினீரெம்பிரான்கச்சியேகம்பமுன்னினைந்தே. (௬௰)

நினைவார்க்கருளும்பிரான்றிருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன்புகலூர்புறம்பயம்பூவணநீர்
பனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலதிகையன்று
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே. (௬௧)

நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராய்த்துறையோர்கெரெதிர்கொள்பாடிக்
கண்ணிப்பிறைச்சடையோன்கச்சியேகம்பங்காண்மின்சென்றே. ()

சென்றேறிவிண்ணுறுமண்ணுமலைதிகழ்வல்லமென்பூ
வின்றேறல்பாய்திருமாற்பேறுபாசூரெழிலழுந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெறும்பேறுந்திருவொற்றியூர்
நின்றோர்தருகச்சியேகம்பமேயார்நிலாவியவே. (௬௩)

நிலாவுபுகழ்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புலிவலம்வில்வலங்கொச்சைதொண்டர்
குலாவுந்திருப்பனங்காடுநன்மாகறல்கூற்றம்வந்தா
லலாயென்றடியார்க்கருள்புரியேகம்பராலயமே. (௬௪)

---

(*) மிறைத்தார் புரம் - என்றும் பாடம்.

ஆலயங்கார்கருக்கூர்வக்கச்சூர்திருக்காரிக்கரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறன்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைமுக்கோணந்தொட்டிக்கலிக
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே. (௬௫)

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழைச்சடைத்திருவேகம்பர்தம்மையுந்தொழத்தவிர்வோம் —
வாழ்ப்பரற்சுரமாற்குறுந்தளிரடிப்பூங்கிழலெல்ம்
வேழக்கிடையிறக்குங்குயபாரமியக்குறினே. (௬௬)

உறுகின்றவெவ்வழல்க்கடமிக்கொடிக்குன்றின்வரப்
பெறுகின்றவண்ணமையிறைவேயப்பேரருளேகம்பனார்
செறிகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திகிரியோர்
குறுகின்றபூங்குவளைக்குறுந்தண்பணையென்றுகொள்ளே (௬௭)

கொள்ளுங்கடுங்கதிர்க்கள்ளித்தீத்தசிலவேழுலர்ந்து
விள்ளும்வெடிப்படும்பாலையென்பாளைவிடலையின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்செம்மைகை
யுள்ளுமதுமறந்தாரெனப்போவதினிரப்பிரிதே (௬௮)

பரிப்பருந்திண்மைப்புடையதிகானரெனிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாக்கும்வெய்யேனஞ்சலஞ்சனமேற்
றரிப்பருந்திண்கல்லையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமராயின்மன்றகுவனே. (௬௯)

வனவரித்திண்புலியின்னதளேகம்பமன்னருளே
யெனவருபொன்னண்ணங்கென்னனாங்கிறகென்ழிழ்க்கழங்குந்
தனவரிப்பந்துங்கொடுத்தெனைப்புல்லியுமிற்பிரிந்தே
யினவரிக்கல்லதர்செல்லுமெதங்கேயொல்குமேழைநெஞ்சே. (௭௰)

நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியுண்ணாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவட்பெற்றெடுத்த
வெஞ்சார்மொழியத்தன்பின்செலமுன்செல்வெடுவெடென்ற
வஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே. (௭௧)

இலவவெங்கானுனையல்லாற்பெருமுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
னுலவுங்கதிர்தணிவித்தருள்செய்யுன்னுறுதுணைக்கே. (௭௨)

துணையொத்தகோவையும்போலெழிற்பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையொடேயொத்தகாதலொடேகினரே
யணையத்தரேறுகைத்தானைக்கண்டனமற்றவரெற்
பிணையொத்தநோக்குடைப்பெண்ணிவடன்னொடும்பேசுமினே. ()

மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளியையு
மென்னலிப்பாக்கைவந்தெய்தினிரேலெம்மனையிற்கண்டீர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுகம்பர்
மன்னரிதேர்த்தொழுங்கச்சிநாட்டிடையணைகுவரே. (௭௪)

உவரச்சொல்வேடுடைக்காடுகந்தாடியவேகம்பனார்
அவரக்கன்போனவிமானத்தின்றயாயிரமுண்மைசூற்றுந்
தவரச்சிகரச்சிவராலயஞ்சூழ்ந்திலங்குவிண்மேற்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்கார்மயிலே. (௭௫)

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வா
யோர்மிக்கசேற்றெழிலென்னவோரொலிபொன்மலையோற்
போர்மிக்கசெந்நெற்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்னொலியேயொக்குநேரிழையே. (௭௬)

நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெஞ்சுகந்தேத்தப்
பார்த்தமையாலிமை தீர்க்குங்கண்மின்னைப்பாகங்கொண்டீர்
போர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலும்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே. (௭௭)

சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிலைச்செம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலுநீள்கன்னியின்
பொறைகொண்டவாழைப்பொதும்பும்புன்சடையேகம்பனார்
நறைகொண்டபூங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே. (௭௮)

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
யென்னவெலாமொப்புக்காதென்றுவீழ்மேகம்பனார்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுள்பொய்கையுளே. (௭௯)

உள்வார்குளிரநெருங்கிக்கடுங்கிடங்கிட்டநன்னீர்
வள்வாளைகளொடுசெங்கயன்மேய்கின்றவங்கணியாட்
கொள்வார்பிறவிகெடாதவேகம்பர்குளிர்குவளை
கள்வார்தருகச்சிநாட்டெழிலேரிகட்பரப்பே. (௮௦)

பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிகுபண்ணையொடுசெம்பட்டர்தண்பணைவாய்ச்
சுரப்பாரெருமைமலர்த்தின்னைத்துன்னுகராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வக்கம்பர்தம்பூங்கச்சியே. (௮௧)

கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவெண்ணென்கரமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமரு
வச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே. (௮௨)

மயக்கத்தகல்விருப்பிசைநல்லுஞ்சுறவொடெறிமகர
மியக்கத்திரைக்கழியோதஞ்சுழிகொளக்கழித்தார்
இயக்கத்தவர்க்கருளாக்கம்பர்கச்சிக்கடலபொன்னூன்
முயக்கத்தகல்வுபெருஞ்சொங்கரீர்வருமூர்க்கஞ்சமே. (கரு)

மேயிரைவைகக்குருகுண்ணாமந்துவுண்டுபுன்னை
மீயிரைவண்டேரமர்புக்டியவிரிக்கட்டல்வாய்ப்
பாயிரைநாகங்கொண்டேரன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிரைகானன்மற்றூராறிவார்கந்துறைமவர்பொய்யே. (கசு)

பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிரையினவாய்க்
கைவரும்புள்ளொடுசெங்கின்மார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டே
ரவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவணைகின்றதே. (கஎ)

இன்றுசெய்வோமித்தனிற்றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுள்ளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெய்யாரைவிடுந்தனைநாளும்விட்டாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீணெறிகாட்டுவரே. (கஅ)

காட்டிவைத்தார்தம்மையாங்கடிம்பூப்பெய்யக்காதல்வெள்ள
மீட்டிவைத்தார்தொழுமேகம்பரேதுமிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பாவித்தொழுதாமவர்பாதங்களே. (ககூ)

பாதம்பரவியோர்பித்துப்பிதற்றிலும்பல்பணியும்
மேதம்புகுதாவண்ணமருளேகம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாதபுன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர்மெய்த்தொண்டரே. (ள)

திருச்சிற்றம்பலம்

திருவேகம்பமுடையார் திருவந்தாதி முற்றிற்று.

கணபதி துணை.

## ௫-வது. திருவொற்றியூர்த் தொகை. *

திருச்சிற்றம்பலம்.

ஆசிரியப்பா.

இருநில மடந்தை யியல்பினி னுடுத்த
பொருகடன் மேகலை முகமெனப் பொலிந்த
ஒற்றிமா நகருடை யோயுருவின்
பெற்றியொன் றாகப் பெற்றோர் யாரே
†மின்னிய மின்னின் பிறக்கநின் சடையே
மன்னிய வண்டநின் சென்னியின் வடிவே
பாவகன் பரிதி பனிமதி தன்னொடு
மூவகைச் சுடருநின் னுதனாட்டம்
தன்னொளி யாரந் தாரா கணமே
விண்ணவர் முதலா வேறோ ரிடமாக்
கொண்டுறை விசும்பே கோலநின் னாகம்
எண்டிசை திண்டோ ளிருங்கட லுடையே
அணியுடை யல்குல் அவனி மண்டலமே
மணிமுடிப் பாந்தணின் றாளிணைக் கழலே
ஒழியா தோடிய மாருத முயிர்ப்பே
வழுவா வோசை முழுதுநின் வாய்மொழி
வானவர் முதலா மன்னுயிர் பரந்த
ஊனமின் ஞானத் தொகுதிநின் னுணர்வே

---

* ஒருபா வொருபஃதெனவுங் கூறுவர். † மின்னிய மின்பிறங்கு நின்சடை எனவும் பாடம்.

பற்றிய பளிங்குப்போலும்
ஒற்றிமாநகருடை யோயுருவே. (௨)

உருவா முலகுக் கொருவனாகிய
பெரியோய்வடிவின் பிறிதின்மையின்
எப்பொருளாயினு மிங்குளதாமெனின்
அப்பொருளுனக்கே யவ்வயவமாதலின்
முன்னியமூவெயின் முழங்கெரியூட்டித்
தொன்னீர்வையகந் துயர்கெடச்சூழ்ந்ததும்
வேள்விமூர்த்திதன் றலையினைவிடுத்ததும்
நீள்விசும்பாளிதன் றோளினைநெரித்ததும்
ஓங்கியமறையோர்க் கொருமுகமொழித்ததும்
பூங்கணைவேளைப் பொடிபடவிழித்ததும்
திறல்கெடவரக்கனைத் திருவிரலுறுத்ததும்
குறைபடக்கூற்றினைக் குறிப்பினிலடர்த்ததும்
என்றிவைமுதலா வன்வினையெல்லாம்
நின்றுழிச்செறிந்தவை நின்செயலாதலின்
உலவாத்தொல்புக ழொற்றியூர
பகர்வோர்நினக்கு வேறின்மைகண்டவர்
நிகழ்ச்சியினிகழி னல்லது
புகழ்ச்சியிற்படுப்பரோ பொருளுணர்ந்தோரே. (௩)

பொருளுணர்ந்தோங்கிய பூமகன்முதலா
இருவினையாக்கையி லியங்குமன்னுயிர்
உருவினுமுணர்வினு முயர்வினும்பணியினும்
திருவினுந்திறலினுஞ் செய்தொழில்வகையினும்
வெவ்வேறாகி வினையின்பிரியா
தொவ்வாப்பன்மையு மற்றவைதொகுக்கும்

மன்னியவேலையுள் வான்றிரைபோல
மின்னிடையெழுந்து மின்னிடையடங்கியும்
பெருகியுஞ்சுருங்கியும் பெயர்ந்துந்தோன்றியும்
விரவியும்வேறாய் நின்றனைவிளக்கம்
ஓவாத்தொல்புகழொற்றியூர
மூவாமேனி முதல்வநின்னருள்
பெற்றவரறிவி னல்லது
மற்றவரறிவரோ நின்னிலைமயக்கே. (ச)

மயக்கமில்சொன்னீ யாயினுமற்றவை
தியக்கமின்றி யறியாச்சூழலும்
உறைவிடமுள்ள மாயினுமற்றது
கறைபடவாங்கே கரந்தகள்ளமும்
செய்வினையுலகினிற் செய்வோயெனினும்
அவ்வினைப்பயனீ யணுகாவண்மையும்
இனத்திடையின்பம் வேண்டினிற்பணிவோர்
மனத்திடைவாரி யாகியவனப்பும்
அன்பினடைந்தவர்க் கணிமையுமல்லவர்ச்
சேய்மையு நாடொறும்
என்பினையுருக்கு மியற்கையவாதலில்
கண்டவர்தமக்கே யுண்டல்கழிதல்
உண்டெனவுணர்த்தனை யொற்றியூர
மன்னியபெரும்புகழ் மாதவ
துன்னியசெஞ்சடைத் தூமதியோயே. (ரு)

தூமதிசடைமிசைச் சூடிதூநெறி
ஆமதியானென வமைத்தவாறே
அறவுருவாகிய வானேறேறுதல்.

இறைவனியா னென்னை வியற்றுமாறே
அதுவவளவ னென்ன நின்றமையார்க்கும்
பொதுவிலையா னென்ன வுணர்த்தியபொருளே
முக்கண னென்பது முத்தீவேள்வியில்
தொக்கதென்னிடை யென்பதோர்சருக்கே
வேதமான்மறி யேந்துதன் மற்றதன்
நாதனென்ன நவிற்றுமாறே
மூவிலையொருதாட் சூலமேந்துதன்
மூவருமியா னென்ன மொழிந்தவாறே
எண்வகைமூர்த்தி யென்பதிவ்வுலகினில்
உண்மையா னென்ன வுணர்த்தியவாறே
நிலநீர் தீவளி யகல்வா னென்றும்
உலவாத்தொல்புக ழுடையோ யென்றும்
பொருளுநற்பூதப் படையோ யென்றும்
தெருளநின்றுலகினிற் றெருட்டுமாறே
ஈங்கிவைமுதலா வெண்ணும்வடிவும்
ஓங்குநின்பெருமை யுணர்த்தவுணராத்
தற்கொலிமாந்தர் தம்மிற்பிறந்த
சொற்பொருள்வண்மையிற் சுழலுமாந்தர்க்
காதியாகிய வறுதொழிலாளர்
ஓதலோவா வொற்றியூர
சிறுவர்தஞ்செய்கையிற் பசித்து
முறுவலித்திருத்தீ முகப்பமெள்வேம். (௬)

அளவினிலிறந்த பெருமையையாயினும்
எனதுளமகலா வொடுங்கிநின்றனையே
மெய்யினையிறந்த மெய்யினையாயினும்

வையகமுழுதநின் வடிவெனப்படுமே
கைவலத்திலை நீ யெனினுங் காதல்
செய்வோர் வேண்டுஞ் சிறப்பொழியாயே
சொல்லியலுடையாற் றுணையிலையாயினும்
நல்லுயிர்க் கூட்ட நாயகனீயே
எங்குமுள்ளோ யெனினும் வஞ்சனை
தங்கியவவரைச் சார்கிலை நீயே
அஃதான்று
பிறவாப் பிறவியை பெருகாப் பெருமையை
துறவாத் துறவியை தொடராத் தொடர்ச்சியை
நுகரா நுகர்ச்சியை நுணுகா நுணுக்கினை
அகலாவகற்சியை யணுகாவணிமையை
செய்யாச் செய்கையை சிறவாச் சிறப்பினை
வெய்யை தணியை விழுமியை நொய்யை
செய்யை பசியை வெளியை கரியை
ஆக்குதி யழித்தி யானாப் பல்பொருள்
நீக்குதி தொகுத்தி நீங்குதி யடைதி
எனையவாகிய வெண்ணில் பல்குணம்
நினைதொறு மயக்கு நீர்மையையாதலின்
ஓங்குகடலுடுத்த வொற்றியூ
ரங்கிதமொழிவார் தம்
சொன்னிலை சுருங்கி னல்லது
நின்னியலறிவோர் யாரிருநிலத்தே (எ)

நிலத்திடைப் பொறையா னுவாவினின்று
சொலத்தகு பெருமைத் துராவுக்கை
மெய்வளியொடு தீக்கொன்றாகி

ஐவகைநெடுங்காற்றூண்குட்டிப்ப
நரையெனுநுரையேநாடொறும்வெளுப்பத்
திரையுடைத்தோலே செழுந்திரையாகக்
கூடியகுருதி நீரினிறைந்து
மூடியவிரும லோசையின்முழங்கிச்
சுடுபசிவெகுளிச் சுறவினமெறியக்
குடரெனு * மாலாக் கூட்டம்வந்தொலிப்ப
ஊன்றடியெலும்பி னுட்டிடலடைந்து
தோன்றியபல்பிணிப் பின்னகஞ்சூழ்ந்த
கால்கையினரம்பே கண்டமாக
மேதகுநிணமே மெய்ச்சாலாக
முழக்குடைத்துளையே முகங்களாக
வழக்குடைமூக்கா ரோதம்வந்தலைப்ப
இப்பரிசியற்றிய வுடலிருங்கடலுட்
டெப்புரவென்னுஞ் சுழித்தலைப்பட்டுங்
காவாவென்னுநின் னருளினைப்பெற்று
நாவாயாகிய நாதநின்பாத
முந்திச்சென்று முறைமையின்வணங்கிச்
சிந்தைக்கூம்பினைச் செவ்வியவிருத்தி
உருகியவார்வப் பாய்பூரித்துப்
பெருகியவன்பெனுங் கயிற்றிடைப்பிணித்துத்
தின்னியசுற்றச் சுடாக்கயிறறுத்து
மன்னியவொருமைப் பொறியினைமுறுக்கிக்
காமப்பாரெனுங் கடுவெளியுற்ற
தூமச்சோதிச் சுடர்க்குறிநிறுத்திச்



---

* ஆலா—ஓர்வகைநீர்ப்பறவை.

## திருவொற்றியூர்த்தொகை.

சுருங்காவுணர்ச்சித் துடுப்பினைத்துழாவி
நெருங்காவளவி னீள்கரையேற்ற
வாங்கியாத்திரை போக்குதிபோலும்
ஓங்குகடலுடுத்த வொற்றியூரோயே. (அ)

ஒற்றியூர வுலவாநின்குணம்
பற்றியாரப் பரவுதல்பொருட்டா
என்னிடைப்பிறந்த வின்னுப்புன்மொழி
நின்னிடையணுகா நீர்மையவாதலின்
ஆவலித்தழுதலி லகன்றதம்மனைத்
தேவலஞ்சேய்மையிற் தேளாளாயினும்
பிறித்தற்கரிய பெற்றியதாகிக்
குறைவிலார்க்குங் குழவியதியல்வினை
யறியாதெண்ணி லூழிப்பிறவியின்
மயங்கிக்கண்ணிலர் கண்பெற்றாங்கே
தாய்தலைப்பட்டுநின் றாளிணைவணக்கம்
வாய்தலையறியா மயக்குறும்வினையேன்
மல்கியவின்பத் தோடென்கூடிய
வெல்லையிலவாவினி லியற்றியவாகக்
கட்டியநீயே யவிழ்க்கினல்ல
தெட்டனையாயினும் யானிதற்கறியேன்
றன்னிடையிருளெனுந் தூற்றிடையொதுங்கி
வெள்ளிடைகாண விருப்புறுவினையேன்
றந்தையுந்தாயுஞ் சாதியுமறிவுஞ்
சிந்தையுந்திருவுஞ் செல்கதித்திறனுந்
துன்பமுந்துறவுந் தூய்மையுமறிவு
மின்பமும்புகழு மிலவுபலபிறவுஞ்

சுவையொளியூறோசை நாற்றந்தோற்ற
மென்றிவைமுதலா விளங்குவவெல்லா
மொன்றநின்னடிக்கே யொருங்குடன்வைத்து
நின்றனன்றனியே நின்னடியல்லது
சார்வுமற்றின்மையிற் றளர்ந்தோர்காட்சிச்
சேர்விடமதனைத் திறப்படநாடி
யெய்துதற்கரியோ யானினிச்
செய்வதுமறிவனோ தெரியுங்காலே. (௧)
காலற்சீறிய கழலோய்போற்றி
மூலத்தொகுதி முதல்வபோற்றி
ஒற்றிமாநக ருடையோய்போற்றி
முற்றுமாகிய முதல்வபோற்றி
யணைதொறுஞ்சிறக்கு மமிர்தேபோற்றி
யிணைபிறிதில்லா வீசபோற்றி
யார்வஞ்செய்பவர்க் கணியோய்போற்றி
தீர்விலின்சுவைத் தேனேபோற்றி
வஞ்சனைமாந்தரை மறந்தோய்போற்றி
நஞ்சினையமிர்தா நயந்தோய்போற்றி
விரிகடல்வையக வித்தேபோற்றி
புரிவுடைவனமாப் புணர்ந்தோய்போற்றி
காணமுன்பொருள் கருத்துறைசெம்மைக்
காணியாகிய வரனேபோற்றி
வெம்மைதண்மையென் றிவைகுணமுடைமையிற்
பெண்ணோடாணெனும் பெயரோய்போற்றி
மேவியவவர்தமை வீட்டினிற்புகுக்குந்
தீபமாகிய சிவனேபோற்றி

மாலோய்போற்றி மன்றயோய்போற்றி
மேலாய்போற்றி வேதியபோற்றி
சந்திரபோற்றி தழலோய்போற்றி
யிந்திரபோற்றி யிறைவபோற்றி
யமரர்போற்றி யழகர்போற்றி
குமராபோற்றி கூத்தாபோற்றி
பொருளேபோற்றி போற்றியென்றுனை
நாத்தழும்பிருக்க நவிற்றினல்லதே
தேற்றுதற்குரியோர் யாரிருநிலத்தே. (௯)

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியூர்த்தொகை முற்றிற்று.

---

உ

கணபதி துணை.

# திருப்பாட்டுத்திரட்டு

## முதலாவது கோயிற்றிருவகவல்.

திருச்சிற்றம்பலம்.

*நினைமின்மனனே நினைமின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
அலைகத்தேரி னலமருகாலின்

---

* நினைமின்மனனே, என்பது இழிவிற் சிறப்பாக வந்த ஒருமையிற் பன்மை மயக்கம்.

உலகப்பொய்வாழ்க்கையை யுடலையோம்புதற்க
பிறந்தனவிறக்கு மிறந்தனபிறக்கும்
தோன்றினமறையு மறைந்தனதோன்றும்
பெருத்தனசிறுக்குஞ் சிறுத்தனபெருக்கும்
உணர்ந்தனமறக்கு மறந்தனவுணரும்
புணர்ந்தனபிரியும் பிரிந்தனபுணரும்
அருந்தினமலமாம் புனைந்தனவழுக்காம்
உவப்பனவெறுப்பாம் வெறுப்பனவுவப்பாம்
என்றிவையனைத்து முணர்ந்தனையன்றியும்
பிறந்தனபிறந்தன பிறவிகடோறும்
கொன்றனையனைத்து மனைத்துனைக்கொன்றன
தின்றனையனைத்து மனைத்துனைத்தின்றன
பெற்றனையனைத்து மனைத்துனைப்பெற்றன
ஓம்பினையனைத்து மனைத்துனையோம்பின
செல்வத்துக்களித்தனை தரித்திரத்தழுங்கினை
சுவர்க்கத்திருந்தனை நரகிற்கிடந்தனை
இன்பமுந்துன்பமு மிருவில்த்தருந்தினை
ஒன்றொன்றொழியா துற்றனையன்றியும்
புற்புதக்குரம்பைத் துச்சிலொதுக்கிடம்
என்னநின்றியங்கு மிருவினைக்கூட்டைக்
கல்லினும்வலிதாக் கருதினையிதனுள்
பீளையுநீரும் புறப்படுமொருபொறி
மீளுங்குறும்பி வெளிப்படுமொருபொறி
சளியுநீருந் தவழுமொருபொறி
உமிழ்நீர்கோழை யொழுகுமொருபொறி
வளியுமலமும் வழங்குமொருவழி

கன்முஞ்சியுங் கரியுமொருவழி
உள்ளுறத்தொடங்கி வெளிப்பட்டாங்கு
சட்டகமுழுவிற் சுட்டெலும்பாகும்
உடலுறுவாழ்க்கையை யுள்ளுறத்தேர்ந்து
கடிமலர்க்கொன்றைச் சடைமுடிக்கடவுளை
ஒழிவருஞ்சிவபெரும் போகவின்பத்தை
நிழலெனக்கடவா நீர்மையொடுபொருந்தி
எனதறநினைவற விருவினைமலமற
வரவொடுசெலவற மருளறவிருளற
இரவொடுபகலற விகற்பமறவொரு
முதல்வனைத்தில்லையுண் முளைத்தெழுஞ்சோதியை
அம்பலத்தரசனை யானந்தக்கூத்தனை
நெருப்பினிலரக்கென நெக்குநெக்குருகித்
திருச்சிற்றம்பலத் தொளிருஞ்சிவனை
நினையின்மனனே நினையின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினையின்மனனே நினையின்மனனே.

---

## ௨௰வது. கோயிற்றிருவகவல்.

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுடைக் குறங்கு
காதலுங் கருத்து மல்லா வின்னிருந்தாட்
பங்கயஞ் சூட்டப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிரு
தன்கோ டிங்கோ டலறுங் கள்வர்

ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை யிருவினைப் பெட்டகம்
வாத பித்தங் கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப் பாண்ட நான்முழத் தொன்பது
பீற்றற் றுண்டம் பேச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்
ஓயா நோய்க்கிட மோடு மரக்கலம்
மாயா விகார மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தி தூற்றும் * பத்தம்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை
சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை
ஈமக் கனலி லிடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி
பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு
மண்மாய் நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமேல்
ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிரெதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கு மிந்திர சாபம்
அதிரு மேகத் துருவி னருநிழல்

* பத்தம் - கட்டு.

நீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண்டயில் கனவிற் கண்டகாட்சி
அதினினும் பொல்லா மாயக் களங்கம்
அறமையு மன்மையும் பிராணே யிறமையும்
இமய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்ளழகினின் னருளினுக் கழகே.

## ௬௰வது. கோயிற்றிருவகவல்.

பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற் றடக்கிய சிவனே யடைக்கலம்
அடங்கலு மடக்கிடுங் கடுங்கொலைக் காலனைக்
காலெடுத் தடக்கிய கடவுணின் னடைக்கலம்
உலகடங் கலும்படைத் துடையவன் றலைபறித்
திடக்கையி லடக்கிய விறைவநின் னடைக்கலம்
செய்யபொன் னம்பலச் செல்வநின் னடைக்கலம்
ஐயநின் னடைக்கல மடியனின் னடைக்கலம்
மனவழி யலைத்திடுங் கனவெனும் வாழ்க்கையும்
விழுப்பொரு ளறியா வழுக்குறு மனனும்
ஆணவ மலத்துதித் தலைந்தலைந் திடு
நினைவைப் புழுவென வெளித்திடு சிந்தையும்
படிறும் பாவமும் பழிப்புறு நினைப்பும்
தவறு மழுக்காறு மிவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சினம்
விகலுங் கொலையு மிழிப்புறு புன்மையும்

பிணக்கு மச்சமுந் துணிவும் பனிப்பும்
முக்குண மட்டையு மும்பெற்றி முயக்கமும்
இடும்பையும் பிணியு மிடைந்த யாக்கையை
உயிரெனுங் குருகுவிட் டோடுங் குரம்பையை
எலும்பொடு நரம்புகொண் டிண்டையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலைச்
செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தைப் புலவுடற் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீற்றற் றோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் றுருத்தியை
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தைப்
புலராக் கவலை விளைமரப் பொதும்பை
ஆசைக் கயிற்றிலாடும்பம் பரத்தைக்
காசிற் பணத்திற் சுழலுங் காற்றாடியை
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்
கடுவெளி யுருட்டிய சகடக் காலைப்
பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கொடுமரக் கலத்தை
இருவினை விலங்கொடு மியங்குபுற் கலனை
நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
னடிமலர்க் கமலத்துக் கபயநின் னடைக்கலம்

வெளியிடை யொருவழி விடுத்தனை வெறித்தெழுங்
கடுவுடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்
இருமையு நாட்டத் திறையே யடைக்கலம்
அடியார்க் கெளியா யடைக்கல மடைக்கலம்
முனைவர் தில்லை மன்றுணின் முடிக்
கருணைமொண் டலையெறி கடலே யடைக்கலம்
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெருமானின் னிணையடிக் கபயம்
அம்பலத் தரசே யடைக்கல முனக்கே.

௯-வது. கச்சித்திருவகவல்.

திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானுடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்
முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்
உள்ளங் காலைப் பஞ்சென வுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கா
றுள்ளும் வாளையெனச் சொல்லித் துதித்தும்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்
நெடுமுடை நாறி நின்றிடு மிடையைத்

மலமுஞ் சலமும் வழும்புந் இரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்.
நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிச்சையவு முதவியின் இயற்றும்
அங்கையைப்பார்த்துக் காந்தளென் றுரைத்தும்
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்
வெப்பு மூத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றூய்மல ரென்றும்
அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்
றண்ணீர் பீளை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்
உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்
கையு மெண்ணெயுங் கல்வா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்

தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயும்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெறு வாயில்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக னாய்நா ளென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்
திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடைவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்பழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
சருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்
இத்தை நீங்க ளினிதென வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை

அண்ட ரண்டமு மனைத்துள புவனமுங்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மார்தரைப் போற்றுத லொழிந்தே.

திருச்சிற்றம்பலம்.

## திருவேகம்பமாலை.

அறந்தானியற்றுமவனிலுங்கோடியதிகமில்லந்
துறந்தானவனிற்சதகோடியுள்ளத்துறவுடையோன்
மறந்தானறக்கற்றறிவோடிருந்திருவாதனையற்
றிறந்தான்பெருமையையென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௧)

கட்டியணைத்திடும்பெண்டிருமக்களுங்காலத்தச்சன்
வெட்டிமுறிக்குமரம்போற்சரீரத்தைவீழ்த்திவிட்டாற்
கொட்டிமுழக்கியழுவார்மயானங்குறுகியப்பா
லெட்டியடிவைப்பரோவிறைவாகச்சியேகம்பனே. (௨)

கைப்பிடிநாயகன்றூங்கையிலேயவன்கையையெடுத்
தப்புறந்தன்னிலசையாமன்முன்வைத்தயல்வளவி
லொப்புடன்சென்றுதுயினீத்துப்பின்வந்துறங்குவாளை
யெப்படிநானம்புவேனிறைவாகச்சியேகம்பனே. (௩)

நன்றாரிற்பூட்டியசூத்திரப்பாவைநன்றார்தப்பினாற்
றன்றாலுமாடிச்சலித்திடுமோவந்தத்தன்மையைப்போ
லுன்றாலியானுந்திரிவதல்லான்மற்றுனைப்பிரிந்தா
லென்றாலிங்காவதுண்டோவிறைவாகச்சியேகம்பனே. (௪)

நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு
மில்லாளுஞ்சுற்றமுமைந்தரும்வாழ்வுமெழிலுடம்பு
மெல்லாம்வெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. (௫)

பொல்லாதவனெறிநில்லாதவனைம்புலன்கடமை
வெல்லாதவன்கல்விகல்லாதவன்மெய்யடியவர்பாற்
செல்லாதவனுண்மைசொல்லாதவனின்றிருவடிக்கன்
பில்லாதவன்மண்ணிலேன்பிறந்தேன்கச்சியேகம்பனே. (௬)

பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைபிறந்துமண்மேல்
லிறக்கும்பொழுதுகொடுபோவதில்லையிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ்சிவன்றந்ததென்றுகொடுக்கறியா
திறக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௭)

அன்னவிசாரமதுவேவிசாரமதுவொழிந்தாற்
சொன்னவிசாரந்தொலையாவிசாரநற்றோகையர்ப்
பன்னவிசாரம்பலகால்விசாரமிப்பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம்வைத்தாயிறைவாகச்சியேகம்பனே. (௮)

கல்லாப்பிழையுங்கருதாப்பிழையுங்கசிந்துருகி
நில்லாப்பிழையுநினையாப்பிழையுநின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந்துதியாப்பிழையுந்தொழாப்பிழையு
மெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே. (௯)

மாயநட்போரையுமாயாமலமெனுமாதரையும்
வீயவிட்டோட்டிவெளியேபுறப்பட்டுமெய்யருளாந்
தாயுடன்சென்றுபின்றாதையைக்கூடிப்புன்றாயைமறந்
தேயுமதேநிஷ்டையென்றுமொழிக்கச்சியேகம்பனே. (௧௦)

வரிக்கோலவேல்விழியாரனுராகமயக்கிற்சென்று
சரிக்கோதுவேனெழுத்தஞ்சுஞ்சொலேன்றமியேனுடல்
நரிக்கோகழுகுபருந்தினுக்கோவெய்யநாய்தனக்கோ
வெரிக்கோவிரையெதுக்கோவிறைவாகச்சியேகம்பனே. (கக)

காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெதிரே
மாதென்றுசொல்லிவருமாயைதன்னைமறலிவிட்ட
தூதென்றெண்ணமற்சுகமென்றுநாடுமித்துற்புத்தியை
யேதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியேகம்பனே. (கஉ)

ஊருஞ்சதமல்லவுற்றார்சதமல்லவுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்லபெண்டீர்சதமல்லபிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்லசெல்வஞ்சதமல்லதேசத்திலே
யாருஞ்சதமல்லநின்றாள்சதங்கச்சியேகம்பனே. (கங)

சீறும்வினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையுமிறைச்சியுமாகிக்கொடுமையினாற்
பீறுமலமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவாகச்சியேகம்பனே. (கச)

பொருளுடையோரைச்செயலினும்வீரரைப்போர்க்களத்திற்
தெருளுடையோரைமுகத்திலுந்தேர்ந்துதெளிவதுபோ
லருளுடையோரைத்தவத்திற்குணத்திலருளிலன்பி
லிருளறுசொல்லினுங்காணத்தகுங்கச்சியேகம்பனே. (கரு)

பருத்திப்பொதியினைப்போலேவயிறுபருக்கத்தங்க
ளருத்திக்கறுசுவைபோடுகின்றார்துறந்தோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டாரவரையிம்மாநிலத்தி
லிருத்திக்கொண்டேனிருந்தாயிறைவாகச்சியேகம்பனே. (கசு)

பொல்லாவிருளகற்றுங்கதிர்கட்கையென்புட்கண்ணினுக்
கல்லாயிருந்திமொருக்கமேயறிவோருளத்தில்
வல்லாரறிவாரறியார்தமக்குமயக்கங்கண்டாய்
யெல்லாம்விழிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே. (௧௭)

வாதுக்குச்சண்டைக்குப்போவார்வருவார்வழக்குரைப்பார்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினந்தேடியொன்று
மாதுக்கழிந்துமயங்கிடுவார்விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே. (௧௮)

ஓயாமற்பொய்சொல்வர்நல்லோரைநிந்திப்பருற்றுபெற்ற
தாயாரைவைவர்சதியாயிரஞ்செய்வர்சாத்திரங்க
ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார்தமையண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேகம்பனே. (௧௯)

அப்பென்றும்வெண்மையதாயினுமாங்கந்நிலத்தியல்பாய்த்
தப்பின்றியேகுணவேற்றுமைதான்பலசார்தலினாற்
செப்பிலபக்குவம்பக்குவமாயுள்ளசீவனிலு
மிப்படியேநிற்பனெங்கள்பிரான் கச்சியேகம்பனே. (௨௦)

நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடிநயம்புரியுந்
தாயார்வயிற்றினரராய்ப்பிறந்துபின்சம்பன்னராய்க்
காயாமரமும்வறளாங்குளமுங்கல்லாவுமென்ன
வீயாமனிதரையேன்படைத்தாய் கச்சியேகம்பனே. (௨௧)

ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்குன்றவில்லுடையா
யேற்றுக்கொடியுடையாயிறைவா கச்சியேகம்பனே. (௨௨)

பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டிமுலையான்மயக்கிக்கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந்தேனிறைவா கச்சியேகம்பனே. (உ௩)

நாவாரவேண்டுமிதஞ்சொல்லுவாருனைநான்பிரிந்தாற்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள்கைதான்வரண்டாற்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்
கீவார்தலைவிதியோவிறைவாகச்சியேகம்பனே. (உ௪)

கல்லார்சிவகதைநல்லோர்தமக்குக்கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க்கன்னங்கொடார்குருசொன்னபடி
நில்லாரறத்தைநினையார்நின்னாமநினைவிற்சற்று
மில்லாரிருந்தென்னிறந்தென்புகலாய்கச்சியேகம்பனே. (உ௫)

வானமுதத்தின்சுவையறியாதவர்வண்கனியின்
னூனமுதத்தின்சுவையென்னல்போலத்தனித்தனியே
தேனமுதத்தின்றெளிவாய்ஞானஞ்சிறிதுமில்லார்க்
கீனமுதச்சுவைநன்றல்லவோகச்சியேகம்பனே. (உ௬)

ஊற்றைச்சரீரத்தையாபாசக்கொட்டிலையூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச்சோறிடுந்தோற்பையைப்பேசரிய
காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டேனிறைவாகச்சியேகம்பனே. (உ௭)

சொல்லால்வருங்குற்றஞ்சிந்தனையால்வருந்தோடஞ்செய்த
பொல்லாததீவினைபார்வையிற்பாவங்கள்புண்ணியநூ
லல்லாதகேள்வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே. (உ௮)

முட்டற்றமஞ்சளையெண்ணெயிற்கூட்டிமுகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில்வெளிமயக்கேசெயும்பாவையர்மே
விட்டத்தைநீதவிர்ப்பாயிறைவாகச்சியேகம்பனே. (௨௯)

பிறந்துமண்மீதிற்பிணியேகுடிகொண்டுபேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின்மேன்மயலாகிப்புன்மாதருக்குட்
பறந்துழன்றேதடுமாறிப்பொன்றேடியப்பாவையர்க்கீந்
திறந்திடவோபணித்தாயிறைவாகச்சியேகம்பனே. (௩௰)

பூதங்களற்றுப்பொறியற்றுச்சாரம்புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப்பேராசைதானற்றுப்பின்முனற்றுக்
காதங்கரணங்களுமற்றவானந்தக்காட்சியிலே
யேதங்களைந்திருப்பேனிறைவாகச்சியேகம்பனே. (௩௧)

நல்லாயெனக்குமனுவொன்றுதந்தருண்ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும்பொழுதியல்பூசைசெயுஞ்
சொல்லார்நற்கோயினியமம்பலவகைத்தோத்திரமு
மெல்லாமுடிந்தபின்கொல்லுகண்டாய்கச்சியேகம்பனே. (௩௨)

சடக்கடத்துக்கிரைதேடிப்பலவுயிர்தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடித்தின்றுழல்வார்க்குடைமைக்காம்பற்றியம
னிடக்கடிக்கும்பொழுதேதுசெய்வார்கச்சியேகம்பனே. (௩௩)

நாறுமுடலைநரிப்பொதிசோற்றினைநான்றினமுஞ்
சோறுங்கறியுநிரப்பியபாண்டத்தைத்தோகையர்தங்
கூறுமலமுமிரத்தமுஞ்சேருங்குழியில்விழா
தேறும்படியருள்வாயிறைவாகச்சியேகம்பனே. (௩௪)

சொக்கிட்டரண்மனைப்புக்குத்திருடிச்சுகித்தவர்வந்து
திக்குற்றமன்னரைக்கேட்பதுபோற்சிவநிந்தைசெய்து
மிக்குக்குருலிங்கசங்கமநிந்தித்துவீடிச்சிக்கு
மெக்குப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே. (௬௫)

விருந்தாகவந்தவர் தங்களுக்கன்னமிகக்கொடுக்கப்
பொருந்தார்வளம்பெறவாழ்வார்நின்னாமத்தினைப்போற்றிநித்த
மருந்தாமுலைப்பங்கரென்றைதபாதகரம்புவியி
லிருந்தாவதேதுகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௬௬)

எல்லாமறிந்துபடித்தேயிருந்தெதமக்குள்ளபடி
வல்லானறிந்துள்ளனென்றுணராதுமெய்மயங்கிச்
சொல்லான்மலைந்திறுகுழ்விதியின்படிதுக்கித்துப்பி
னெல்லாஞ்சிவன்செயலென்பார்கண்கச்சியேகம்பனே. (௬௭)

பொன்னைநினைந்துவெகுவாகத்தேடுவர்பூவையன்ன
டன்னைநினைந்துவெகுவாயுருகுவர்தாரணியி
லுன்னைநினைந்திங்குனைப்பூசியாதவுலுத்தரெல்லா
மென்னையிருந்துகண்டாயிறைவாகச்சியேகம்பனே. (௬௮)

கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைக்காமுகரைக்
கொடும்பவஞ்செய்யுநிர்மூடரைத்தண்மைக்குவலயத்தி
னெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
விடும்பரையேன்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே. (௬௯)

கொன்றேனனேகமுயிரையெல்லாம்பின்புகொன்றுகொன்று
தின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனதுதீர்கவென்றே
நின்றேனின்சன்னிதிக்கேயதனாற்குற்றநீபொறுப்பா
யென்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே. (௭௦)

---

## திருவேகம்பவிருத்தம்.

அன்னையெத்தனையெத்தனையன்னையோவப்பனெத்தனையெத்தனையப்பனோ, பின்னையெத்தனையெத்தனைபெண்டிரோ பிள்ளையெத்தனையெத்தனைபிள்ளையோ, முன்னையெத்தனையெத்தனை சன்மமோ மூடனாயடியேனு மறிந்திலே, னின்ன மெத்தனை யெத்தனை சன்மமோவென்செய்வேன் கச்சியேகம்பநாதனே.

---

## திருத்தில்லை.

காம்பிணங்கும்பணைத்தோளார்க்கும்பொன்னுக்குங்காசினிக்குந்
தாம்பிணங்கும்பலவாசையும்விட்டுத்தனித்துச்செத்துப்
போம்பிணந்தன்னைத்திரளாகக்கூடிப்புரண்டினிமேற்
சாம்பிணங்கத்துதையோவென்செய்வேன்றில்லைச்சங்கரனே. (க)

சோறிடுநாடுதுணிதருங்குப்பைதொண்டன்பரைக்கண்
டேறிடுங்கைகளிறங்கிடுந்தீவினையெப்பொழுது
நீறிடுமேனியர்சிற்றம்பலவர்நிருத்தங்கண்டா
லூறிடுங்கண்களுருகிடுநெஞ்சமென்னுள்ளமுமே. (உ)

அழலுக்குள்வெண்ணெயெனவேயுருகிப்பொன்னம்பலத்தார்
நிழலுக்குணின்றுதவமுஞற்றாமனிட்டரேமின்னார்
குழலுக்கிசைந்தவகைமாலைகொண்டுகுற்றேவல்செய்து
விழலுக்குமுத்துலையிட்டிறைத்தேனென்விதிவசமே. (ங)

ஓடாமற்பாழுக்குழையாமலோரமுரைப்பவர்பாற்
கூடாமனல்லவர்கூட்டம்விடாமல்வெங்கோபநெஞ்சி
னாடாமனன்மைவழுவாமலின்றைக்குநாளைக்கென்று
தேடாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (ச)

பூராமலேற்பவர்க்கில்லையென்னுமற்பழுதுசொல்லி
வாராமற்பாவங்கள்வந்தணுகாமன்மனமயர்ந்து
பேராமற்சேவைபிரியாமலன்புபெறுதவரைச்
சேராமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (௫)

கொல்லாமற்கொன்றதைத்தின்னுமற்குத்திரங்கோள்களவு
கல்லாமற்கைதவரோடிணங்காமற்கனவிலும்பொய்
சொல்லாமற்சொற்களைக்கேளாமற்றோகையர்மாயையிலே
செல்லாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே. (௬)

முடிசார்ந்தமன்னருமற்றுமுள்ளோருமுடிவிலொரு
பிடிசாம்பராய்வெந்துமண்ணாவதுங்கண்டுபின்னுமிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதல்லாற்பொன்னினம்பலவ
ரடிசார்ந்துநாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே. (௭)

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிதமா
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
யாலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே. (௮)

ஆயும்புகழ்த்தில்லையம்பலவாணரருகிற்சென்றுற்
பாயுமிடபங்கடிக்குமரவம்பின்பற்றிச்சென்றுற்
பேயுங்கணமும்பெருந்தலைப்பூதமும்பின்றொடரும்
போயென்செய்வாய்மனமேபிணக்காடவர்போமிடமே. (௯)

ஓடுமெடுத்ததளாடையுஞ்சுற்றியுலாவிமெள்ள
வீடுகடோறும்புலிவாங்கியேவிதியற்றவர்போ
லாடுமெருட்கொண்டிங்கம்பலத்தேநிற்குமாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்னகாண்சிவகாமசவுந்தரியே. (௧௰)

ஊட்டுவிப்பானு முறக்குவிப்பானுமிங் கொன்றோடொன்றை
மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை
காட்டுவிப்பானு மிருவினைப்பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப்பானு மொருவனுண்டே தில்லையம்பலத்தே. (௧௧)

அடியார்க் கெளியவரம்பலவாண ரடிபணிந்தான்
மடியாமற் செல்வவரம்பெறலாம் வையமேழளந்த
நெடியோனும் வேதனுங் காணாச்சிலம்பு நிழலணுகுங்
குடிகாணு நாங்களவர் காணுமெங்கள் குலதெய்வமே. (௧௨)

தெய்வச்சிதம்பரதேவா வுன்சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்த சொப்பனமாமன்னர்வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங்கே மண்டலீகர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடகசாலையெங்கே யிது கண்மயக்கே. (௧௩)

உடுப்பானும் பாலனமுண்பானு முய்வித்தொருவர் தம்மைக்
கெடுப்பானு மேதென்று கேள்விசெய்வானுங் கெதியுடன்றக்
கொடுப்பானுந் தேகியென்றேற்பானு மேற்கக் கொடாமனின்று
தடுப்பானு நீயல்லையோ தில்லையானந்தத் தாண்டவனே. (௧௪)

வித்தாரம் பேசினுஞ் சேர்ந்தேறினுங் கம்பமீதிருந்து
தத்தாவென்றோதிப் பவுரிகொண்டாடினுந் தம்முன்றம்பி
யொத்தாசை பேசினுமாவதுண்டோ தில்லையுண்ணிறைந்த
கத்தாவின் சொற்படியல்லாது வேறில்லை கன்மங்களே. (௧௫)

பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்துவிட்டா
லிறவாதிருக்க மருந்துண்டு காணிது வெப்படியோ
அறமார்புகழ்த் தில்லையம்பலவாணரடிக்கமலம்
மறவாதிருமனமே யது காணன்மருந்துனக்கே. (௧௬)

தவியாதிருநெஞ்சமேதில்லைமேவியசங்கரனைப்
புவியார்ந்திருக்கின்றனாகரனைப்புராந்தகனை
யவியாவிளக்கையென்னம்பலத்தாடியையைந்தெழுத்தாற்
செவியாமனிசெவித்தாற்பிறவாமுத்திசித்திக்குமே. (கஎ)

நாவின்மறைப்பொருளம்பலவாணனைநம்பியவர்
பாவிலொருதரஞ்சேவிக்கொணாதிருப்பார்க்கருங்கல்
மேலிலெடுத்தவர்கைவிலங்கிட்டுத்தமயர்மீண்டுமொரு
காலினிறுத்துவர்கிட்டியுந்தாம்வந்துகட்டுவரே. (கஅ)

ஆற்றோடுதும்பையணிந்தாடுமம்பலவாணர்தம்மைப்
போற்றாதவர்க்கடையாளமுண்டேயிந்தப்பூதலத்திற்
சோற்றாவியற்றுச்சுகமற்றுக்கூற்றுத்துணியுமற்றே
யேற்றாலும்பிச்சைகிடையாமலேக்கற்றிருப்பர்களே. (க௯)

அத்தனைமுப்பத்துமுக்கோடிதேவர்க்கதிபதியை
யித்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெங்
கித்தனைப்பொன்னம்பலத்தாடுமையனைக்காணக்கண்க
ளெத்தனைகோடியுகமோதவஞ்செய்திருக்கின்றவே. (உ௦)

## திருவெண்காட்டுத் திருவிசைப்பா.

பூதமுங்கரணம் பொறிகளும்புலனும் பொருந்திய குணங்களோர்மூன்றும், நாதமுங்கடந்தவெளியிலேநீயுநானுமாய்நிற்குநாளுளதோ, வாதமுஞ்சமயபேதமுங்கடந்த மனோலய வின்பசாகரனே, ஏதுமொன்றறியேன்யாதுநின்செயலே யிறைவனேயேகநாயகனே.

யாவரேயிருந்தும் யாவரேவாழ்ந்தும் யாவரேயெமக்குறவாயும் தேவரீரல்லாற் றிசைமுகமெனக்குத் திருவுளமறிய வேறுளதோ, பாவலாமொருவன் செந்தமிழ்க்கிரங்கிப் பரவையாருடலமாற்ற, ஏவலாளாகியிரவெலாமுழன்றவிறைவனேயேகநாயகனே. (௨)

உண்டதேயுண்டு முடுத்ததேயுடுத்து மடுத்தடுத்துரைத்ததே யுரைத்தும், கண்டதேகண்டுங் கேட்டதேகேட்டுங் கழிந்தனகடவுநாளெல்லாம், விண்டதாமரைமேலன்னம் வீற்றிருக்கும்விழவுறு வீதிவெண்காடா, அண்டரேபோற்ற வம்பலத்தாடுமையனேயுய்யுமாறருளே. (௯)

வேறு.

மத்தளைதயிருண்டானுமலர்மிசைமன்னினானும்
நித்தமுந்தேடிக்காணுநிமலனேயமலமூர்த்தீ
செய்த்தனைக்கயல்பாய்நாங்கூர்ச்சேந்தனைவேந்தனிட்ட
கைத்தளைநீக்கியென்முன் காட்டுவெண்காடனே. (௧)

திருச்செங்காடு.

நெருப்பானமேனியர்செங்காட்டிலாத்திநிழலருகே
யிருப்பார்திருவுளமெப்படியோவின்னமென்னையின்னங்
கருப்பாசயக்குழிக்கேதள்ளுமோகண்ணன்காணரிய
திருப்பாதமேதருமோதெரியாதுசிவன்செயலே. (௧)

திருவொற்றியூர்.

ஐயுந்தொடர்ந்துவிழியுஞ்செருகியறிவழிந்து
மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்று வேண்டுவன்யான்
செய்யுந்திருவொற்றியூருடையீர்திருநீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணியைந்தெழுத்தோதவுங்கற்பியுமே. (௧)

சுடப்படுவாரறியார்புரமூன்றையுஞ்சுட்டபிரான்
திடப்படுமாமதிற்றென்னொற்றியூரன்றெருப்பரப்பி
நடப்பவர்பொற்பதந்தன்றலைமேற்படநன்குருண்டு
கிடப்பதுகாண்மனமேவிதியேட்டைக்கிழிப்பதுவே. (௨)

## திருவிடைமருதூர்.

காடேதிரிந்தென்னகாற்றேபுசித்தென்னகந்தைசுற்றி
யோடேயெடுத்தென்னவுள்ளன்பிலாதவரோங்குவிண்ணோர்
நாடேயிடைமருதீசர்க்குமெய்யன்பர்நாரியர்பால்
வீடேயிருப்பினுமெய்ஞ்ஞானவீட்டின்பமேவுவரே. (௩)

தாயும்பகைகொண்டபெண்டீர்பெரும்பகைதன்னுடைய
சேயும்பகையுறவோரும்பகையிச்செகம்பகை
யாயும்பொழுதிலருஞ்செல்வநீங்கிலிங்காதலினுற்
றேயுநெஞ்சேமருதீசர்பொற்பாதஞ்சுதந்திரமே. (௪)

## திருக்கழுக்குன்றம்.

காடோசெடியோகடற்புறமோகனமேமிகுந்த
நாடோநகரோநகர்நடுவோநலமேமிகுந்த
வீடோபுறந்திண்ணையோதமியேனுடல்வீழுமிட
நீடோய்கழுக்குன்றிலீசாவுயிர்த்துணைநின்பதமே. (௧)

## திருக்காளத்தி.

பத்தும்புகுந்துபிறந்துவளர்ந்துபட்டாடைசுற்றி
முத்தும்பவளமும்பூண்டோடியாடிமுடிந்தபின்பு
செத்துக்கிடக்கும்பிணத்தருகேயினிச்சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்னகாண்கயிலாபுரிக்காளத்தியே. (௧)

பொன்னாற்பிரயோசனம் பொன்படைத்தாற்குண்டு. பொன்ப
டைத்தோன், றன்னாற்பிரயோசனம் பொன்னுக்கில் லேதுண்டத்
தன்மையைப்போ, லுன்னாற்பிரயோசனம் வேணதெல்லாமுண்டு
னைப்பணியு, மென்னாற்பிரயோசனமேதுண்டு காளத்தியீசனே.

## மதுரை.

விடப்படுமோ விப்பிரவஞ்சவாழ்க்கையை விட்டுமனந்
திடப்படுமோ நின்னருளின்றியே தினமேயலையக்
கடப்படுமோ வற்பர்வாயிலிற்சென்று கண்ணீர்ததும்பிப்
படப்படுமோ சொக்கநாதாசௌந்தரபாண்டியனே. (க)

## பொது.

உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
கடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருண்டருந்துணைக்கே
விடையேறுமீசர்திருநாமமுண்டிந்தமேதினியில்
வடகோடுயர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்கே (க)

வீடுநமக்குத்திருவாலங்காடுவிமலர்தந்த
வோடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதெல்லாந்தரநன்னெஞ்சமே
யீடுநமக்குச்சொல்வோரொருவருமிங்கில்லையே. (உ)

நாடிக்கொண்டீசரைநாட்டமுற்றாயிலைநாதரடி
தேடிக்கொண்டாடித்தெளிந்தாயிலைசெகமாயைவந்து
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதங்கண்முனிந்தவென்றும்
பீடிப்பையோநெஞ்சமேயுனைப்போலில்லைப்பித்தர்களே. (௩)

கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே. (௪)

கண்ணுண்டுகாணக்கருத்துண்டுநோக்கக்கசிந்துருகப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்தவெதிர்நிற்கவீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானுடமே. (௫)

சொல்லிலுஞ்சொல்லின்முடிவிலும்வேதச்சுருதியிலு
மல்லிலுமாசற்றவாகாயந்தன்னிலுமாய்ந்துவிட்டோ
ரில்லிலுமன்பரிடத்திலுமீசனிருக்குமிடங்
கல்லிலுஞ்செம்பிலுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே. (௬)

வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தாற்
றினைப்போதளவுநில்லாதுகண்டாய்சிவன்பாதநினை
நினைப்போரைமேவுநினையாரைநீங்கிந்நெறியினின்று
லுனைப்போலொருவருண்டோமனமேயெனக்குற்றவரே. (௭)

பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கையின்முன்கொடுத்துக்
கட்டியிருந்தகனமாயக்காரிதன்காமமெல்லாம்
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே. (௮)

ஊதுற்றகொங்கையும்மாணார்கலவியுஞ்சூழ்பொருளும்
போதுற்றபூசலுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தால்
ஈதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே. (௯)

வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்
றீதுற்றசெல்வமென்தேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே. (௧௦)

வேதத்தினுட்பொருண்மண்ணாசைமங்கையைவிட்டுவிட்டுப்
போதித்தவன்மொழிகேட்டிலையோசெய்தபுண்ணியத்தா
லாதித்தன்சந்திரன்போலேவெளிச்சம்தாம்பொழுது
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே. (௧௧)

மனையாளுமக்களும்வாழ்வுந்தனமுந்தன்வாயின்மட்டே
யினமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே. (கஉ)

அத்தமும்வாழ்வுமகத்துமட்டேவிழியம்பொழுக
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே. (கங)

சீயுங்குருதிச்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவா
யீயுமெறும்பும்புகுமின்னுயோனிக்கிரவுபகல்
மாயுமனிதரைமாயாமல்வைக்கமருந்தில்லையே. (கச)

சீதப்பனிக்குண்டுமிக்கெனக்கந்தைதினம்பசித்தால்
நீதுய்க்கச்சோறுமனைதோறுமுண்டுநினைவெழுந்தால்
வீதிக்குநல்லவிலைமாதருண்டிந்தமேதினியி
லேதுக்குநீசலித்தாய்மனமேயென்றும்புண்பட்டே. (கரு)

ஆறுண்டுதோப்புண்டணிவீதியம்பலந்தானுமுண்டு
நீறுண்டுகந்தைநெடுங்கோவணமுண்டுநித்தநித்த
மாறுண்டலாவிமயங்குநெஞ்சேமனைதோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின்சும்மாவிருக்கச்சுகமுமுண்டே. (கசு)

உடுக்கக்கவிக்கக்குளிர்காற்றுவெய்யிலொடுங்கிவந்தாற்
றடுக்கப்பழையவொருவேட்டியுண்டுசகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணையுண்டெங்குமுண்டுபசித்துவந்தாற்
கொடுக்கச்சிவனுண்டுநெஞ்சேநமக்குக்குறைவில்லையே. (கஎ)

விட்டேனுலகம்விரும்பேனிருவினைவீணருடன்
கிட்டேனவருரைகேட்டுமிரேன்மெய்கெடாதநிலை
தொட்டேன்சுகதுக்கமற்றுவிட்டேன்றொல்லைநான்மறைக்கு
மெட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்தியதே. (உ௪)

அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தைதயைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்செம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க
வெட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே. (உ௫)

எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்னபேறெனக்கே. (உ௬)

அண்ணறன்வீதியரசிருப்பாகுமண்டபமுடையோர்
நண்ணுருநாலொன்பதாமவரேவலுமன்னுமிவ்வூர்
துண்ணென்பசிக்குமடைப்பள்ளியானசுகமுமெல்லா
மெண்ணிலிகாலமவமேவிடுத்தனமெண்ணரிதே. (உ௭)

என்பெற்றதாயருமென்னைப்பிணமென்றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்றமாதரும்போவென்றுசொல்லிப்புலம்பிவிட்டார்
கொன்பெற்றமைந்தரும்பின்வலம்வந்துகுடமுடைத்தா
ருன்பற்றொழியவொருபற்றுமில்லையுடையவனே. (உ௮)

கறையற்றபல்லுங்கரித்துணியாடையுங்கவலையின்றிப்
பொறையுற்றநெஞ்சமும்பொல்லாதவூணும்புறந்திண்ணையுந்
தறையிற்கிடப்புமிராத்துண்ணுமோடஞ்சக்கமறியக்
குறைவற்றசெல்வமென்றேகோலமாமறைகூப்பிடுமே. (உ௯)

எட்டுத்திசையும்பதினாறுகோணமுமெங்குமொன்றாய்
முட்டித்ததும்பிமுளைத்தோங்குசோதியைமூடரெல்லாங்
கட்டிச்சுருட்டித்தங்கக்கத்தில்வைப்பர்கருத்தில்வையார்
பட்டப்பகலையிரவென்றுகூறிடும்பாதகரே. (௩௦)

வாய்நாறுமூழன்மயிர்ச்சிக்குநாறிடுமையிடுங்கண்
பீநாறுமங்கம்பிணவெடிநாறும்பெருங்குழிவாய்ச்
சீநாறும்யோனியழன்றுமிந்தியச்சேறுசிக்கிப்
பாய்நாறுமங்கையர்க்கோவிங்ஙனேமனம்பற்றியதே. (௩௧)

உரைக்கைக்குநல்லதிருவெழுத்தைந்துண்டுரைப்படியே
செருக்கித்தரிக்கத்திருநீறுமுண்டுதெருக்குப்பையிற்
றரிக்கக்கரித்துணியாடையுமுண்டெந்தச்சாதியிலு
மிரக்கத்துணிந்துகொண்டேன்குறைவேதுமெனக்கில்லையே. (௩௨)

ஏதப்பட்டாயினிமேற்படும்பாட்டையிதென்றறிந்து
போதப்பட்டாயில்லைநல்லோரிடஞ்சென்றுபுல்லறிவால்
வாதைப்பட்டாய்மடமாதர்கல்விமயக்கத்திலே
பேதைப்பட்டாய்நெஞ்சமேயுனைப்போலில்லைபித்தருமே. (௩௩)

சுரப்பற்றுவல்வினைசுற்றமுமற்றுத்தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர்கையிணக்கற்றுக்கவலையற்று
வரப்பற்றுநாதனைவாயாரவாழ்த்திமனமடங்கப்
பரப்புற்றிருப்பதன்றோபரமாபரமானந்தமே. (௩௪)

பேய்போற்றிரிந்துபிணம்போற்கிடந்திட்டபிச்சையெல்லா
நாய்போலருந்திநரிபோலுழன்றுநன்மங்கையரைத்
தாய்போற்கருதித்தமர்போலனைவர்க்குந்தாழ்மைசொல்லிச்
சேய்போலிருப்பர்கண்டீருண்மைஞானந்தெளிந்தவரே. (௩௫)

விதியார்படைப்புமரியாரளிப்பும்வியன்கயிலைப்
பதியார்தொடைப்புமம்பாலனுங்காதுபரானந்தமே
கதியாகக்கொண்டுமற்றெல்லாந்துயிலிற்கனவென்ன
மதியாதிருமனமேவிதுகாணென்மருந்தினக்கே. (௬௨)

நாய்க்குண்டுதெண்டுநமக்குண்டுபிச்சைசந்மனைவெல்ல
வாய்க்குண்டுமந்திரபஞ்சாட்சரமதியாமல்வரும்
பேய்க்குண்டுநீறுதிகைப்புண்டுன்றபிறவிப்பிணி
நோய்க்குண்டுதேசிகன்றன்னருணோக்கங்கணோக்குதற்கே. (௬௩)

நேமங்கணிட்டைகள்வேதங்களாகமநீதிநெறி
யோமங்கடர்ப்பணஞ்சந்திசெபமந்த்ரயோகநிலை
நாமங்கள்சந்தனம்வெண்ணீறுபூசிகலமுடனே
சாமங்கடோறுமிவர்செய்யும்பூசைகள்சர்ப்பனையே. (௬௪)

நானெத்தனைபுத்திசொன்னாலுங்கேட்டிலைநன்னெஞ்சமே
யேனிப்படிக்கெட்டுழல்கின்றாயினியேதுமிலா
வானத்தின்மீனுக்குவன்றூண்டிலிட்டவகையதுபோற்
போனத்தைமீளநினைக்கின்றனையென்னபுத்தியிதே. (௬௫)

அஞ்சக்கரமெனுங்கோடாலிகொண்டிந்தவைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டைவேரறவெட்டிவளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச்சதாசிவமென்கின்றவித்தையிட்டுப்
புஞ்சக்களைபறித்தேன்வளர்த்தேன்சிவபோகத்தையே. (௬௬)

தாயாருஞ்சுற்றமும்பெண்டிருங்கைவிட்டுத்தாழ்ந்திடநா
ணீயாருநானாரெனப்பகர்வாரந்தநேரத்திலே
நோயாரும்வந்துகுடிகொள்வரேகொண்டநோயுமொரு
பாயாருநீயுமல்லாற்பின்னையேதுநட்பாமுடலே. (௬௭)

ஆயும்பொழுதுமயிர்க்கால்கடோறுமருங்கிருமி
தோயுமலக்குட்டையாகியகாயத்தைச்சுட்டுவிட்டாற்
பேயுநடனமிடுங்காடாமென்றுபேசுவதை
நீயுமறிந்திலையோபொருட்டேட்டினினைந்தனையே. (சஅ)

பூணும்படிக்கல்பொன்னுக்குத்தானல்லபூமிதனைக்
காணும்படிக்கல்லமங்கையர்க்கல்லநற்காட்சிக்கல்ல
சேணுங்கடந்தசிவனடிக்கல்லவென்சிந்தைகெட்டுச்
சாணும்வளர்க்கவடியேன்படுந்துயர்சற்றல்லவே. (சகூ)

வெட்டாதசக்கரம்பேசாதமந்திரம்வேறொருவர்க்
கெட்டாதபுட்பமிறையாத்தீர்த்தமினிமுடிந்து
கட்டாதலிங்கங்கருதாதநெஞ்சமுங்கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோகுருநாதன்மொழிந்ததுவே. (ருo)

எருமுட்டைபிட்கினுந்திருந்திடுஞ்செல்லுக்கெவாழுவார்
கருமுட்டைபுக்குக்கழலகன்றாய்சுனதுக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர்போலழும்பேதையிர்பேதுகிறீர்
ஒருமுட்டும்வீட்டுமரணம்மென்மைறக்குமோதுமினே. (ருக)

மையாடுகண்ணியுமைந்தருமவாழ்வுமனையுஞ்செந்தீ
லையாநின்மாயையுருவெளித்தோற்றமகிலத்துள்ளே
மெய்யாயிருந்ததுநாட்செலநாட்செலவெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே. (ருஉ)

ஆயாயுலகவையாயந்திடுந்தூயவருந்தயாபரத்
போயாகிலுமுண்மையைத்தெரிந்தாயில்லைபூதலத்தில்
வேயார்ந்ததோளியர்காமவிகாரத்தில்வீழ்ந்தழுந்திப்
பேயாய்விழிக்கின்றனைமனமேயென்னபித்தனக்கே. (ருங)

அடியாருறவுமரன்பூசைநேசமுமன்புமன்றிப்
படிமீதில்வேறுபயனுளதோபங்கயன்வகுத்த
குடியானசுற்றமுந்தாரமும்வாழ்வுங்குயக்கலங்கள்
தடியாலடியுண்டவாறொக்குமென்றினஞ்சார்ந்திலரே. (ருச)

ஆங்காரப்பொக்கசங்கோபக்களஞ்சியமாணவந்தா
னீங்காவரண்மனைபொய்வைத்தகூடம்வினைநீடிவளர்
தேங்காற்பெருந்திறற்காமவிலாசமித்தேகமிதல்
பாங்காயுனைப்பணிந்தெப்படிஞானம்பலிப்பதுவே. (ருரு)

ஒழியாப்பிறவியெடுத்தேங்கியேங்கியுழன்றநெஞ்சே
யழியாப்பதவிக்கவுடதங்கேட்டியறிதியினை
மழுமான்கரத்தனைமால்விடையானைமனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்திவிம்மியழுநன்மைவேண்டுமென்றே. (ருசு)

நாய்க்கொருசூலுமதற்கோர்மருத்துவநாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம்பிடிபடுமோபெருங்காஞ்சிரங்கா
யாக்குவாராதருந்துவாரார்த்திபோலுடம்பு
தீக்கிரையாவதல்லாலேதுக்காமிதைச்சீப்புமினே. (ருஎ)

கச்சிற்கிடக்குங்கனதனத்திற்கடைக்கண்கள்பட்டே
யிச்சித்திருக்கின்றவேழைநெஞ்சேயிம்பரன்பயந்த
பச்சைப்பசுங்கொடியுண்ணாமுலைபங்கர்பாதத்திலே
ள தச்சுக்கிடமனமேயொருகாலுந்தவறில்லையே. (ருஅ)

மாணார்விழியைக்கடந்தேறிவந்தனன்வாழ்குருவுங்
கோணாகியென்னைக்குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனாலும்பேறிருந்தாலுநற்பேறிதுபொய்யன்றுகண்
ணானாலுமிந்தவுடம்போடிருப்பதருவருப்பே. (ருகூ)

தாயாருக்குத்தகன்க்கிரியைசெய்கையிற்பாடியவெண்பா.

சற்றாகிலுந்தன்னைத்தானறியாய்த்தனையாய்ந்தவரை
யுற்றாகிலுமுரைக்கப்பொருந்தாயுனக்கானகிலை
யுற்றாய்குருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றேன்
பெற்றாய்மடநெஞ்சமேயுனைப்போலில்லைபித்தனுமே. (௧௦)
உளியிட்டகல்லையுமொப்பிட்டசாந்தையுமூத்தையறப்
புளியிட்டசெம்பையும்போற்றுகிலேனுயர்பொன்னெனவே
யொளியிட்டதாளிரண்டுள்ளேயிருத்துவதுண்மையென்று
வெளியிட்டடைத்துவைத்தேனினிமேலொன்றும்வேண்டிலனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## தாயாருக்குத்தகன்கிரியை செய்கையிற்பாடிய

### வெண்பா.

ஐயிரண்டுதிங்களாயங்கமெலாநொந்துபெற்றுப்
பையலென்றபோதேபரிந்தெடுத்துச் – செய்யவிரு
கைப்புறத்திலேந்திக்கனகமுலைதந்தாளை
யெப்பிறப்பிற்காண்பேனினி. (௧)

முந்தித்தவங்கிடந்துமுந்நூறுநாட்சுமந்தே
யந்திபகலாச்சிவனையாதரித்துத் – தொந்தி
சரியச்சுமந்துபெற்றதாயார்தமக்கோ
வெரியத்தழன்மூட்டுவேன். (௨)

வட்டிலிலுந்தொட்டிலிலுமார்மேலுந்தோண்மேலுங்
கட்டிலிலும்வைத்திருந்துகண்ணினைக்காதலித்து – முட்டச்
சிறகிலிட்டுக்காப்பாற்றிச்சீராட்டுந்தாய்க்கோ
விறகிலிட்டுத்தீமூட்டுவேன். (௩)

ஒரந்துசுமந்துபெற்றுநோவாமலேந்திமுலை
தந்துவளர்த்தெடுத்துத்தாழாமே - யந்திபகல்
கையிலேகொண்டென்னைக்காப்பாற்றுந்தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டுவேன். (௪)

அரிசியோநானிடுவேனுத்தாடனக்கு
வரிசையிட்டுப்பாத்துமகிழாமல் - துரிசியுள்ள
தேனேயமிர்தமேசெல்வத்திரவியப்பு
மானேயெனவழைத்தவாய்க்கு. (௫)

அள்ளியிடுவதரிசியோதாய்தலைமேற்
கொள்ளிதனைவைப்பேனோக்சாமன் - மெள்ள
முகமேன்முகம்வைத்துமுத்தாடியென்றன்
மகனேயெனவழைத்தவாய்க்கு. (௬)

விருத்தம்

முன்னையிட்டதீமுப்புரத்திலே
பின்னையிட்டதீதென்னிலங்கையில்
அன்னையிட்டதீயடிவயிற்றிலே
யானுமிட்டதீமூள்கமூள்கவே. (௭)

வெண்பா.

வேகுதேதீயதனில்வெந்துபொடிசாம்ப
லாகுதேபாவியேனையகோ - மாகக்
குருவிபறவாமற்கோதாட்டியென்னைக்
கருதிவளர்த்தெடுத்தகை. (௮)

வெந்தாளோசோணகிரிவித்தகாநின்பதத்தில்
வந்தாளோவென்னைமறந்தாளோ - சந்ததமு
முன்னையேநோக்கியுகந்துவரங்கிடந்தென்
றன்னையயீன்றெடுத்ததாய். (௯)

வீற்றிருந்தாளன்னைவீதிதனிலிருந்தாள்
நேற்றிருந்தாளின்றுவெந்துநீறானாள் - பாற்மெறளிக்க
வெல்லீரும்வாருங்களேமெத்தன்றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம். (௧௦)

---

## தனிவெண்பா.

### இடைமருது.

மென்றுவிழுங்கிவிடாய்கழிக்கநீர்தேட
லென்றுவிடியுமெனக்கென்கோவே - நன்றி
கருதார்புரமூன்றுங்கட்டழலாற்செற்ற
மருதாவுன்சந்நிதிக்கேவந்து. (௧)

### ஒற்றி.

கண்டங்கரியதாங்கண்மூன்றுடையதா
மண்டத்தைப்போலவழகியதாங் - தொண்ட
ருடலுருகத்தித்திக்குமோங்குபுகழொற்றிக்
கடலருகேநிற்குங்கரும்பு. (௨)

ஒடுவிழுந்துசீப்பாயுமொன்பதுவாய்ப்புண்ணுக்
கிடுமருந்தையானறிந்துகொண்டேன் - கடுவருந்துந்
தேவாதிதேவன்றிருவொற்றியூர்த்தெருவிற்
போவாரடியிற்பொடி. (௩)

வாவியெல்லாந்தீர்த்தமணலெல்லாம்வெண்ணீறு
காவனங்களெல்லாங்கணநாதர் - பூவுலகில்
வீதுசிவலோகமென்றேமெய்த்தவத்தோ
ரோதுந்திருவொற்றியூர். (௪)

## திருவாரூர்.

ஆரூரரிங்கிருக்கவவ்வூர்த்திருநாளென்
றூரூர்கடோறுமுழலுவீர் - நேரே
யுளக்குறிப்பைநாடாதவூமர்காணீவிர்
விளக்கிருக்கத்தீத்தேடுவீர். (௫)

ஏருவாய்க்கிருவிரன்மேலேறுண்டிருக்குங்
கருவாய்க்கோகண்கலக்கப்பட்டாய் - திருவாரூர்த்
தேரோடும்வீதியிலேசெத்துக்கிடக்கின்றாய்
நீரோடுந்தாரைக்காநீ. (௬)

## திருக்காஞ்சி.

எத்தனையூரெத்தனைவீடெத்தனைதாய்பெற்றவர்க
ளெத்தனைபேரிட்டழைக்கவேனென்றே - நித்த
மெனக்குக்களையாற்றாயேகம்பாகம்பா
வுனக்குத்திருவிளையாட்டோ. (௭)

## கச்சிக்காரோணம்.

அத்திமுதலெறும்பீறானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகா - மெத்தப்
பசிக்குதையாபாவியேன்பாழ்வயிற்றைநற்பபற்றி
யிசிக்குதையாகாரோணரே. (௮)

## திருக்காளத்தி.

பொய்யையொழியாய்புலாலைவிடாய்காளத்தி
யையரையெண்ணாயறஞ்செய்யாய் - வெய்ய
சினமேயொழியாய்திருவெழுத்தைந்தோதாய்
மனமேயுனக்கென்னமாண்பு. (௯)

## திருவிருப்பையூர்.

மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே - நாதா
விருப்பையூர்வாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையூர்வாராமற்கா. (௧௦)

## திருவையாறு.

மண்ணுந்தணலாறவானும்புகையாற
வெண்ணரியதாயுமிளைப்பாறப் - பண்ணுமயன்
கையாறவுமடியேன்காலாறவுங்கண்பா
ரையாதிருவையாறா. (௧௧)

## குற்றாலம்.

காலன்வருமுன்னேகண்பஞ்சடைமுன்னே
பாலுண்கடைவாய்படுமுன்னே - மேல்விழுந்தே
யுற்றாரழுமுன்னேயூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையே கூறு. (௧௨)

---

## பொதுவெண்பா.

சிற்றம்பலமுஞ்சிவனுமருகிருக்க
வெற்றம்பலந்தேடிவிட்டோமே - நித்தம்
பிறந்திடத்தைத்தேடுதேபேதைமடநெஞ்சங்
கறந்திடத்தைநாடுதேகண். (௧)

தோடவிழும்பூங்கோதைத்தோகையுனையிப்போது
தேடினவர்போய்விட்டார்தேறியிரு - நாடி
யென்னைநினைத்தாலிப்புவியிலுனைத்தப்பேனோ
னுன்னைநினைத்தாலுமை. (௨)

வாசற்படிகடந்துவாராதபிச்சைக்கிங்
காசைப்படுவதில்லையண்ணலே - யாசைதனைப்
பட்டிறந்தகாலமெல்லாம்போதும்பரமேட்டி
சுட்டிறந்தஞானத்தைச்சொல். (௩)

நச்சரவம்பூண்டானைநன்றாத்தொழுவது
மிச்சையிலேதானங்கிருப்பதுவும் - பிச்சைதனை
வாங்குவதுமுண்பதுவும்வந்துதிருவாயிலிலே
தூங்குவதுந்தானேசுகம். (௪)

இருக்குமிடந்தேடியென்பசிக்கேயன்ன
முருக்கமுடன்கொண்டுவந்தாலுண்பேன் - பெருக்க
வழைத்தாலும்போகேனரனேயென்றேக
மிளைத்தாலும்போகேனினி. (௫)

விட்டுவிடப்போகுதுயிர்விட்டவுடனேயுடலைச்
சுட்டுவிடப்போகின்றார்சுற்றத்தார் - பட்டதுபட்
டெந்நேரமுஞ்சிவனையேத்துங்கள்போற்றுங்கள்
சொன்னேனதுவேசுகம். (௬)

ஆவியொடுகாயமழிந்தாலுமேதினியிற்
பாவியென்றுநாமம்படையாதே - மேவியசீர்
வித்தாரமுங்கடம்பும்வேண்டாமடநெஞ்சே
செத்தாரைப்போலேதிரி. (௭)

வெட்டவெளியானவெளிக்குந்தெரியாது
கட்டளையுங்கைப்பணமுங்காணுதே - இட்டமுடன்
பற்றென்றார்பற்றறுதுபூரிவியேநெஞ்சிலவன்
இற்றிறனவேளைத்தவிர்ப்பு. (௮)

## பின்முடுகு வெண்பா.

இப்பிறப்பைநம்பியிருப்பரோநெஞ்சகமே
வைப்பிருக்கவாயின்மனையிருக்கச் - சொப்பனம்போல்
விக்கிப்பற்கிட்டக்கண்மெத்தப்பஞ்சிட்டப்பைக்
கச்சிச்செத்துக்கொட்டக்கண்டு. (௯)

மேலுமிருக்கவிரும்பினையேவெள்விடையோன்
சீலமறிந்திலையேசிந்தையே - கால்கைக்குக்
கொட்டையிட்டுமெத்தையிட்டுக்குத்திமொத்தப்பட்டவுடல்
கட்டையிட்டுச்சுட்டுவிடக்கண்டு. (௰)

ஒன்பதுவாய்த்தோற்பைக்கொருநாளைப்போலவே
யன்புவைத்துநெஞ்சேயலைந்தாயே - வன்கழுக்க
டத்தித்தத்திச்சட்டைதட்டிக்கட்டிப்புட்டுக்
கத்திக்குத்தித்தின்னக்கண்டு. (௧௧)

இன்னம்பிறக்கவிசைவையோநெஞ்சமே
மன்னரிவரென்றிருந்துவாழ்ந்தவரை - முன்ன
மெரிந்தகட்டைமீதிலிணைக்கோவணத்தை
யுரிந்துருட்டிப்போட்டதுகண்டு. (௧௨)

முதற்சங்கமுதூட்டுமொய்க்குழலார்தம்மை
நடுச்சங்கநல்விலங்குபூட்டுங் - கடைச்சங்க
மாம்போதனவூதுமம்மட்டோவிம்மட்டோ
நாம்பூமிவாழ்ந்தநலம். (௧௩)

எத்தனைநாள்கூடியெடுத்தசரீரமிவை
யத்தனையுமண்டின்பதல்லவோ - வித்தகனார்
காலைப்பிடித்துமெள்ளக்கங்குல்பகலற்றிடத்தே
மேலைக்குடியிருப்போமே. (௧௪)

எச்சிலென்றுசொல்லியிதம்கித்தம்பேசாதே
யெச்சிலிருக்குமிடமறியீ - ரச்சிறனை
யுய்த்திருந்துபார்த்தாலொன்றும்வெளிப்படும்பின்
சித்திராமயமாமே. (கரு)

எத்தனைபேர்நட்டகுழியெத்தனைபேர்தொட்டமுலை
யெத்தனைபேர்பற்றியிழுத்தவிதழ் - நித்தநித்தம்
பொய்யடாபேசும்புவியின்மடமாதரைவிட்
டுய்யடாவுய்யடாவுய். (கசு)

இருப்பதுபொய்போவதுமெய்யென்றெண்ணிநெஞ்சே
யொருத்தருக்குந் தீங்கினைநீயுன்னாதே - பருத்தொந்தி
நம்மதென்றுநாமிருப்பநாய்நரிகள்பேய்க்கழுகு
தம்மதென்றுதாமிருக்குந்தான். (கஎ)

எத்தொழிலைச்செய்தாலுமேதவத்தைப்பட்டாலு
முத்தர்மனமிருக்குமோனத்தே - வித்தகமாய்க்
காதிவிளையாடியிருகைவீசிவந்தாலுந்
தாதிமனநீர்க்குடத்தேதான். (கஅ)

மாலைப்பொழுதினறுமஞ்சளரைத்தேகுளித்து
வேலைமினக்கிட்டுவிழித்திருந்து - சூலாகிப்
பெற்றான்வளர்த்தாள்பெயரிட்டாள்பெற்றபின்னை
பித்தானாலென்செய்வாள்பின். (கக)

விருத்தம்.

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந்தேடி
நலனொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கப்பொய்யுரைத்துப் புற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப் புதல்வர்களைப்பெறுவீர்.

காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவர்பிளந்தமரத்துளையிற்காலைநுழைத்துக்கொண்டீர்
ஆப்பதனையசைத்துவிட்டகுரங்கதனைப்போல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரே. (௨௦)

இதுவுமது வேறு.

வடிவந்தானும்வாலிபம்மகளுந்தாயுமாமியும்
படிஇகரண்டாருமூரிலேபழிகொண்டாடனீதியோ
குடிவந்தானுமேழையேகுயவன்றானுங்கூழையோ
நடுநின்றானும்வீணனேசகாரஞ்சூறையானதே. (௨௧)

இதுவுமது வேறு.

மண்ணுமுருகுமரமுருகுமாயையுருகுமாலுருகும்
பெண்ணுமுருகுமாணுருகும்பேதாபேதவகையுருகும்
அண்ணலுருகுமிடத்தமர்ந்தவாத்தாளுருகுமாவணியான்
எண்ணியுருகுங்குருநாதனென்பாருரைத்தவோர்மொழியே. (௨௨)

திருச்சிற்றம்பலம்.

---

## முதல்வன் முறையீடு.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

மூலமறியேன்முடியுமுடிவறியேன்
ஞாலத்துட்பட்டதுயர்நாடடுக்குதடா. (௧)

அறியாமையாமலத்தாலறிவுமுதற்கெட்டேனடா
பிரியாவினைப்பயனாற்பித்துப்பிடித்தேனடா. (௨)

தினுவாதியநான்குந்தானாய்மயங்கினண்டா
மனுவாதிசத்திவலையிலகப்பட்டேனடா. (௩)
மாமாயையென்னும்வனத்திலலைகிறண்டா
நாமாயுலகனைத்துந்தாதுகலங்கிறண்டா. (௪)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

மண்ணாசைப்பட்டேனமண்ணுண்டுபோட்டதடா
பொன்னாசைபெண்ணாசைபோகேனேயென்குதே. (௫)
மக்கள்சுற்றத்தாசைமறக்கேனேயென்குதே
இக்கரசாமாசையதுதீரேனேயென்குதே. (௬)
வித்தைகற்குமாசையதுவிட்டொழியேனென்குதே
சித்துகற்குமாசைசிதையேனேயென்குதே. (௭)
மந்திரத்திலாசைமறக்கேனேயென்குதே
சுந்தரத்திலாசைதுறக்கேனேயென்குதே. (௮)
கட்டுவர்க்கத்தாசைகழலேனேயென்குதே
செட்டுதனிலாசைசிதையேனேயென்குதே. (௯)
மாற்றுஞ்சலவைமறக்கேனேயென்குதே
சோற்றுக்குழியுமின்னந்தூரேனேயென்குதே. (௰)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

ஐந்துபுலனுமடங்கேனேயென்குதே
சிந்தைதவிக்கிறதுந்தேறேனேயென்குதே. (௧௧)
காமக்குரோதங்கடக்கேனேயென்குதே
நாமேயர்சென்றுநாடோறுமெண்ணுதே. (௧௨)
அச்சமாங்காரமடங்கேனேயென்குதே
கைச்சுமின்னுமானங்கழலேனேயென்குதே. (௧௩)

நீர்க்குமிழியாமுடலைநித்தியமாயெண்ணுதே
ஆர்க்குமுயராசையழியேனேயென்குதே. (கச)

கண்ணுக்குக்கண்ணென்றிரேகட்டையில்வேகக்கண்டும்
எண்ணுந்திரமாயிருப்போமென்றெண்ணுதே. (கரு)

அநித்தியத்தைநித்தியமென்றாதரவாயெண்ணுதே
தனித்திருக்கேனென்குதேதனைமறக்கேனென்குதே. (கசு)

நரகக்குழியுமின்னுநான்புசிப்பேனென்குதே
உரகப்பட்டத்தல்குலுனைக்கெடுப்பேனென்குதே. (கஎ)

குரும்பைமுலையுங்குடிகெடுப்பேனென்குதே
அரும்புவிழியுமென்றனுவியுண்பேனென்குதே. (கஅ)

மாதருருக்கொண்டமறலிவஞ்சமெண்ணுதே
ஆதரவுமற்றிங்கராத்தாயுருகிறண்டா. (கக)

தந்தையின்றருளுங்கன்னிவன்னாதா
எந்தவிதத்தினேறிப்படருவண்டா. (உ0)

கன்னிவன்னாதா கன்னிவன்னாதா.

புல்லாகிப்பூடாய்ப்புலர்ந்தநாள்போதாதோ
கல்லாய்மரமாய்க்கழிந்தநாள்போதாதோ. (உக)

இரியாய்க்கீடமாய்க்கெட்டநாள்போதாதோ
நீரியாயூர்வனவாய்நின்றநாள்போதாதோ. (உஉ)

பூதமொடுதேவருமாய்ப்போனநாள்போதாதோ
வேதனைசெய்தானவராய்வீந்தநாள்போதாதோ. (உங)

அன்னைவயிற்றிலழிந்தநாள்போதாதோ
மன்னவனாய்வாழ்ந்துமரித்தநாள்போதாதோ. (உச)

தாயாகித் தாரமாய்த்தாழ்ந்தநாள்போதாதோ
சேயாப்புருட னுமாய்ச்சென்றநாள்போதாதோ. (உரு)

நோயுண்ணவே மெலிந்துநொந்தநாள்போதாதோ
பேயுண்ணப்பேயாய்ப்பிறந்தநாள்போதாதோ. (உசு)

ஊனவுடல்கூன்குருடாயுற்றநாள்போதாதோ
ஈனப்புசிப்பிலிளைத்தநாள்போதாதோ. (உஎ)

பட்டகளையும்பரதவிப்பும்போதாதோ
கெட்டநாள்கெட்டெனென்றுகேளாதும்போதாதோ. (உஅ)

இல்லாமைக்கேயழுதுநின்றநாள்போதாதோ
எல்லாருமென்பாரமெடுத்தநாள்போதாதோ. (உகூ)

காமன்கணையாற்கடைபட்டல்போதாதோ
ஏமன்கரத்தாலிடியுண்டல்போதாதோ. (௩0)

நான்முகன்பட்டோலைநறுக்குண்டல்போதாதோ
தேன்றுளபத்தானேமிதேக்குண்டல்போதாதோ. (௩க)

உருத்திரனார்சங்காரத்துற்றநாள்போதாதோ
வருத்தமறிந்தையிலைவாவென்றழைத்தையிலை. (௩உ)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

பிறப்பைத்தவிர்த்தையிலைபின்னைக்கொண்டையிலை
இறப்பைத்தவிர்த்தையிலையென்னென்றுகேட்டையிலை. (௩௩)

பாசமரித்தையிலைபரதவிப்பைத்தீர்த்தையிலை
பூசியநீற்றைப்புனையென்றளித்தையிலை. (௩௪)

அடிமையென்றுசொன்னையிலைஞ்சுமணிதந்தையிலை
வீடுமுலகம்போக்கியுன்றன்வீட்டைமளித்தையிலை. (௩ரு)

உன்னிலழைத்தைதயிலையொன்றாக்கிக்கொண்டையிலை
நின்னடியார்கூட்டத்தினியழைத்துவைத்தைதயிலை. (௫௬)

ஓங்குபரத்துளொளித்தவடியார்க்கடியான்
ஈங்கோரடியாவெனமக்கென்றுரைத்தைதயிலை. (௫௭)

நாமந்தரித்தைதயிலைநாவெழுதியவின்றையிலை
சேமவருளிலெனைச்சிந்தித்தழைத்தைதயிலை. (௫௮)

முத்தியளித்தைதயிலைமோனங்கொடுத்தைதயிலை
சித்தியளித்தைதயிலைசீராட்டிக்கொண்டையிலை. (௫௯)

தவிர்ப்பைத்தவிர்த்தைதயிலைதானாக்கிக்கொண்டையிலை
அவிப்பரியநீயாமென்னஞ்சதவிர்த்தைதயிலை. (௬௦)

நின்றநிலையினிறுத்தியெனைவைத்தைதயிலை
தின்றுங்கரணமொடுதொக்கழியப்பார்த்தைதயிலை. (௬௧)

கட்டவுலகக்காட்சிக்கட்டொழியப்பார்த்தைதயிலை
நீட்டையிலேநில்லென்றுநிறுத்திக்கொண்டையிலை. (௬௨)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

கடைக்கணருள்தாடா கன்னிவனநாதா
கெடுக்குமலமொருக்கிக்கிட்டிவரப்பாரேடா. (௬௩)
காதல்தணியேனேகண்மெலிழேனே
சாதல்தவிரேனேசங்கடந்தானீரேனே. (௬௪)
உன்னைத்துதியேனேனூர்காடிவாரேனே
பொன்னடியைப்பாரேனேபூசித்ததில்லேனே. (௬௫)
ஓங்காரப்பொற்சிலம்பினொல்லாசப்பாரேனே
பாங்கானதண்டையுடனணியும்பாரேனே. (௬௬)

வீரகண்டாமணியின்வெற்றிதனைப்பாரேனே
சூரர்கண்டுபோற்றுமந்தச்சுந்தரத்தைப்பாரேனே. (௪௭)

இடையில்புலித்தோலிருந்தநலம்பாரேனே
விடையிலெழுந்தருளும்வெற்றிதனைப்பாரேனே. (௪௮)

ஆனையுரிபோர்த்தவழகுதனைப்பாரேனே
மானைப்பிடித்தேந்துமலர்க்கரத்தைப்பாரேனே. (௪௯)

மாண்டார்தலைபூண்டமார்பழகைப்பாரேனே
ஆண்டார்நமக்கென்றறைந்துதிரியேனே. (௫௦)

கண்டங்கறுத்துநின்றகாரணத்தைப்பாரேனே
தொண்டர்குழுவினின்றதோற்றமதைப்பாரேனே. (௫௧)

அருள்பழுத்தமாமதியாமாநத்தைப்பாரேனே
திருநயனக்கடையொளிருஞ்செழுங்கொழுமைபாரேனே. (௫௨)

செங்குமிழின்றண்டம்வளர்சிங்காரம்பாரேனே
அங்கனியைவென்றவதரத்தைப்பாரேனே. (௫௩)

முல்லைநிலவெறிக்குமூரலொளிபாரேனே
அல்லார்புருவத்தழகுதனைப்பாரேனே. (௫௪)

மகரங்கிடந்தொளிரும்வண்மைதனைப்பாரேனே
சிகரமுடியழகுஞ்செஞ்சடையும்பாரேனே. (௫௫)

கங்கையொடுதிங்களின்றகாட்சிதனைப்பாரேனே
பொங்கரவைத்தான்சடையிற்பூண்டவிதம்பாரேனே. (௫௬)

சரக்கொன்றைபூத்தசடைக்காட்டைப்பாரேனே
எருக்கறுகுமத்தையணியேகாந்தம்பாரேனே. (௫௭)

கொக்கிறகுசூடினின்றகொண்டாட்டம்பாரேனோ
அக்கினியையேந்தினின்றவானந்தம்பாரேனோ. (ருஅ)

தூக்கியகாலுந்துடியிடையும்பாரேனோ
தீர்க்கமுயலகன்மேற்றிண்டுவந்தம்பாரேனோ. (ருகூ)

வீசுகரமும்விகசிதமும்பாரேனோ
ஆசையளிக்குமபயகரம்பாரேனோ. (சுo)

அரிபிரமர்போற்றவமரர்சயசயெனப்
பெரியம்மைபாகம்வளர்பேரழகைப்பாரேனோ. (சுக)

சுந்தரநீற்றின்சொகுசுதனைப்பாரேனோ
சந்திரசேகரனைத்தயவுசெய்தல்பாரேனோ. (சுஉ)

கன்னிவனநாதா, கன்னிவனநாதா.

கெட்டநாள்கெட்டாலுங்கிருபையின்றிப்பார்ப்பேனோ
பட்டநாள்பட்டாலும்புதுமையெனக்குக்கிட்டாதோ. (சுரு)

நற்பருவமாக்குமந்தநாளெனக்குக்கிட்டாதோ
எப்பருவமுங்கழன்றவேகாந்தங்கிட்டாதோ. (சுச)

வாக்கிறந்துநின்றமவுனமதுகிட்டாதோ
தாக்கிறந்துநிற்குமந்தத்தற்சுத்திகிட்டாதோ. (சுரு)

வெந்துயரைத்தீர்க்குமந்தவெட்டவெளிகிட்டாதோ
சிந்தையையந்தீர்க்குமந்தத்தெற்றல்கிட்டாதோ. (சுசு)

ஆனவடியார்க்கடிமைகொள்ளக்கிட்டாதோ
ஊனமறவென்னையுணர்த்துவித்தல்கிட்டாதோ. (சுஎ)

என்னென்றுசொல்லுவேண்டாவென்குருவேகேளேடா
பின்னையெனக்குநீயல்லாற்பிறிதில்லையே. (சுஅ)

கன்னிவனநாதா கன்னிவனநாதா

அன்னவிகாரமதுவற்றவிடங்கிட்டாதோ
சொன்னவிகாரந்தொலைந்தவிடங்கிட்டாதோ. (௬௯)

உலகவிகாரமொழிந்தவிடங்கிட்டாதோ
மலக்குழுவின்மின்னார்வசியாதுங்கிட்டாதோ. (எ௦)

ஒப்புவமைபற்றொழிந்தவிடங்கிட்டாதோ
செப்புதற்குமெட்டாத்தெளிந்தவிடங்கிட்டாதோ. (எக)

வாக்குமனாதீதவகோசரத்திற்செல்லவென்னை
தாக்குமருட்குருவேநின்றாளிணைக்கேயான்போற்றி. (எ௨)

பட்டணத்தார் முதல்வன் முறையீடு முற்றிற்று.

அருட்புலம்பல்.

ஐங்கரனைத்தெண்டனிட்டேனருளடையவேண்டுமென்று
தங்காமல்வந்தொருவன்றற்சொருபங்காட்டியெனை. (க)

கொள்ளைப்பிறப்பறுக்கக்கொண்டான்குருவடிவம்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி. (௨)

ஆதாரமோராறுமைம்பத்தோரக்ஷரமும்
சூதானகோட்டையெல்லாஞ்சுட்டான்றரிசறவே. (௩)

மெத்தவிகாரம்விளைக்கும்பல்பலவாம்
தத்துவங்களெல்லாந்தலைகெட்டுவெந்ததடி. (௪)

என்னுடனேபிறந்தோரெல்லோருமபட்டார்கள்
தன்னந்தனியேதரித்திருக்கமாட்டேனடி. (௫)

எல்லாரும்பட்டகளமென்றுதொலையுமடி
சொல்லியழுதாற்றுயரமெனக்காறுமடி. (௬)

மண்முதலாமைம்பூதமாண்டுவிழக்கண்டேண்டி
விண்முதலாமைம்பொறிகள்வெந்துவிழக்கண்டேண்டி. (௭)

நீக்காப்புலன்களைந்துநீறாகவெந்ததடி
வாக்காதியைவரையுமாண்டுவிழக்கண்டேண்டி. (௮)

மனக்கரணமத்தனையும்வல்லைகயேமட்டழிய
இனக்கரணத்தோடேயெரிந்துவிழக்கண்டேண்டி. (௯)

ஆத்துமதத்துவங்கள்அடுக்கழியவெந்ததடி
போற்றும்வகையெப்படியோர்போர்தமிழந்தானே. (௰)

வித்தியாதத்துவங்கள்வெந்துவிழக்கண்டேண்டி
சுத்தவித்தைதயைந்தினையுஞ்சுட்டான்றுரிசறவே. (௧௧)

மூன்றுவகைக்கிளையுமுப்பத்தாறுவரையும்
கான்றுவிழச்சுட்டுக்கருவேரறுத்தாண்டி. (௧௨)

குருவாகிவந்தானேகுலமறுக்கவந்தானே
உருவாகிவந்தானேவுருவழிக்கவந்தானே. (௧௩)

கேடுவருமென்றறியேன்கெடுமதிகண்டோற்றோழல்
பாடுவருமென்றறியேன்பதியாண்டிருந்தேண்டி. (௧௪)

எல்லாரும்பட்டகளமின்னவிடமென்றறியேன்
பொல்லாங்குதீர்க்கும்பொறியிலியைக்கண்டேண்டி. (௧௫)

உட்கோட்டைக்குள்ளிருந்தாரொருக்கமடிந்தார்கள்
அக்கோட்டைக்குள்ளிருந்தாரறுபதுபேர்பட்டார்கள். (௧௬)

ஒக்கமடிந்ததடியூடுருவ்வெந்ததடி
கற்கோட்டையெல்லாங்கரிக்கோட்டையாச்சுதடி. (௧௭)

தொண்ணூற்றறுவரையுஞ்சுட்டான்றரிசறவே
கண்ணேறுபட்டதடி கருவேரறுத்தாண்டி. (௧௮)

ஓங்காரங்கெட்டதடி யுள்ளதெல்லாம்போச்சுதடி
ஆங்காரங்கெட்டதடி யடியோடறுத்தாண்டி. (௧௯)

தரையாங்குடிலைமுதல் தட்டுருவவெந்ததடி
இரையுமனத்திடும்பையெல்லாமறுத்தாண்டி. (௨௦)

முன்னைவினையெல்லாமுழுதுமறுத்தாண்டி
தன்னையறியவேதாவொன்றுருத்தியானேண்டி. (௨௧)

என்னையேநானறியவிருவினையுமீட்டழித்துத்
தன்னையறியத்தலமெனக்குச்சொன்னாண்டி. (௨௨)

தன்னையறிந்தேண்டி தனிக்குமரியானேண்டி
தன்னந்தனியேதனியிருக்கும்பக்குவமோ. (௨௩)

வீட்டிலொருவரில்லைவெட்டவெளியானேண்டி
காட்டுக்கெறித்தநிலாகனவாச்சேகண்டதெல்லாம். (௨௪)

நகையாரோகண்டவர்கள்நாட்டுக்குப்பாட்டலவோ
பகையாரோகண்டவர்கள்பார்த்தாருக்கேச்சலவோ. (௨௫)

இந்நிலைமைகண்டாண்டி யெங்குமிருந்தாண்டி
கன்னியழித்தாண்டி கற்பைக்குலைத்தாண்டி. (௨௬)

கற்புக்குலைத்தமையுங்கருவேரறுத்தமையும்
பொற்புக்குலைத்தமையும்போர்தமிழ்த்தன்மையும். (௨௭)

என்னவினைவருமோவின்னமெனக்கென்றறியேன்
சொன்னசொல்லெல்லாம்பலித்ததடி சோர்வறவே. (௫௮)

கங்குல்பகலற்றிடத்தேகாட்டிக்கொடுத்தாண்டி
பங்கழித்தாண்டிபார்த்தானைப்பார்த்திருந்தேன். (௫௯)

சாதியிற்கூட்டுவரோசாத்திரத்துக்குள்ளாமோ
ஓதியுணர்ந்ததெல்லாமுள்ளபடியாச்சுதடி. (௬௦)

என்னகுற்றஞ்செய்தனோவெல்லாருங்காணாமல்
அன்னைசுற்றமெல்லாமறியாரோவம்புவியில். (௬௧)

கொன்றுரைத்தின்றேனோதின்றுரைக்கொன்றேனோ
எண்ணுதெல்லாமெண்ணுமிச்சைமறந்தேனே. (௬௨)

சாதியிற்கூட்டுவரோசமயத்தோரெண்ணுவரோ
பேதித்துவாழ்ந்ததெல்லாம்பேச்சுக்கிடமாச்சுதடி. (௬௩)

கண்டார்க்குப்பெண்ணலவோகாணார்க்குக்காமமடி
உண்டார்களுண்டதெல்லாமூணல்லாதுண்பார்களோ. (௬௪)

கொண்டார்கள்கொண்டதெல்லாங்கொள்ளாதார்கொள்ளுவரோ
விண்டவர்கள்கண்டவரோகண்டவர்கள்விண்டவரோ. (௬௫)

பண்டாயநான்மறைகள்பாடும்பரிசலவோ
தொண்டாயதொண்டருளந்தோற்றியொடுங்குமதோ. (௬௬)

ஓதவரிதோவொருவருணர்வரிதோ
பேதமறவெங்கும்விளங்கும்பெருமையன்காண். (௬௭)

வாக்குமனமுங்கடந்தமனோலயன்காண்
நோக்கவரியவன்காணுண்ணியரினுண்ணியன்காண். (௬௮)

சொல்லுக்கடங்கான்காண் சொல்லிறந்துநின்றவன்காண்
கல்லுளிருந்தகனலொளிபோல் நின்றவன்காண். (௨௯)

சுட்டிறந்தபாழ்தனிற் சுகித்திருக்கச்சொன்னவன்காண்
எட்டிலெழுத்தோவெழுதினவன்கைப்பிழையோ. (௩௦)

சும்மாவிருக்கவைத்தான் சூத்திரத்தைநானறியேன்
அம்மாபொருளிதெனவடியில்வீழ்ந்திலனடி. (௩௧)

பார்த்தவிடமெல்லாம்பரமாகக்கண்டேனடி
கோத்தநிலைகுலைத்தகொள்கையறிந்திலேனடி. (௩௨)

மஞ்சனமாட்டிமலர்பறித்துச்சாத்தாமல்
நெஞ்சுவெறும்பாழானே னின்றநிலைகாணேனடி. (௩௩)

பாடிப்படித்திருந்தும்பன்மலர்கள்சாத்தாமல்
ஓடித்திரியாமலுருக்கெட்டுவிட்டேனடி. (௩௪)

மாணிக்கத்துள்ளொளிபோல்மருவியிருந்தானடி
பேணித்தொழுமடியார்பேசாப்பெருமையன்காண். (௩௫)

அன்றுமுதலின்றளவுமறியாப்பருவமதில்
என்றும்பொதுவாயிருந்தவிராட்டியன்காண். (௩௬)

சித்தவிகாரத்தால்சின்மயனைக்காணாமல்
புத்திகலங்கிப்புகுந்தேன்பொறிவழியே. (௩௭)

பத்தியறியாமற்பாழிற்கவிழ்ந்தேனடி
ஒத்துவிடாநித்திரையென்றெடுத்திருந்தேனடி. (௩௮)

செத்தாரையொத்தேனடி சிந்தைதெளிந்தேனடி
மற்றுமில்லையடி மறுமாற்றந்தோன்றேனடி. (௩௯)

கல்வியல்லகேள்வியல்லக்காட்டுங்காரணங்காண்
எல்லையளவற்றதடியெங்குநிறைந்ததடி. (௫௦)

வாசாமகோசரத்தைதமருவியிடங்கொண்டாண்டி
ஆசுசமில்லாண்டியறிவுக்கறிவாண்டி. (௫௧)

பத்துத்திசைக்குமடங்காப்பருவமடி
எத்திசைக்குமெங்குமிடைவிடாதேகமடி. (௫௨)

தித்திக்கவூறுமடிசித்தமுடையார்க்குப்
பத்திக்கடலுட்பதித்தபரஞ்சோதியடி. (௫௩)

உள்ளுணர்வாய்நின்றவர்தமுணர்வுக்குணர்வாண்டி
எள்ளளவுமுள்ளதிலேயேறிக்குறையாண்டி. (௫௪)

தூருந்தலையுமிலான்றோற்றமொடுக்கமிலான்
ஆரும்பியாமலகண்டமாய்நின்றாண்டி. (௫௫)

எத்தனையோவண்டத்திருந்தவர்களெத்தனைபேர்
அத்தனைபேருண்டாலும்அணுவுங்குறையாண்டி. (௫௬)

வாக்குமனமும்வடிவுமிலாவின்பொருள்காண்
போக்கும்வரவுமிலான்பொருவரியபூரணன்காண். (௫௭)

காட்சிக்கெளியான்காண்கண்டாலிங்காணுன்காண்
மாட்சிமனம்வைத்தார்க்குமாணிக்கத்தின்னொளிகாண். (௫௮)

வாழ்த்தியவனைவழிபட்டால்மன்னுயிர்கள்
தோற்றவரியான்காண்சொல்லிறந்தசோதியன்காண். (௫௯)

ஐயமறுத்தவனையாராய்வாருண்டானால்
வையகத்தேவந்துமலர்ப்பாதம்வைத்திடுவான். (௬௦)

அணுவுக்குமேருவுக்குமகம்புறமாய்நின்றான்காண்
கணுமுற்றஞானக்கரும்பின்றெளிவான்காண். (சுக)

எந்நாளுமிந்நாளுமிப்படியாயப்படியாய்ச்
சொன்னாலுங்கேளான்காண்சோத்திரத்திற்கொள்ளான்காண். (சுஉ)

ஆத்தாளுக்காத்தாளாமப்பனுக்குமப்பனுமாம்
கோத்தார்க்குக்கோத்தநிலைகொண்டகுணக்கடல்காண். (சுங)

இப்போபுதிதோடியெத்தனைநாளுள்ளதடி
அப்போதைக்கப்போதருளறிவுந்தந்தாண்டி. (சுச)

பற்றற்றார்பற்றாகப்பற்றியிருந்தாண்டி
குற்றமறுத்தாண்டி கூடியிருந்தாண்டி. (சுரு)

வெட்டவெளியிலெனைமேவியிருந்தாண்டி
பட்டப்பகலில்டிபார்த்திருந்தாரெல்லோரும்; (சுசு)

வாழ்வானவாழ்வெனக்குவந்ததடிவாழாமல்
தாழாமற்றாழ்ந்தேண்டிசற்றுங்குறையாமல். (சுஎ)

பொய்யானவாழ்வெனக்குப்போதுமெனக்காணேண்டி
மெய்யானவாழ்வெனக்குவெறும்பாழாய்விட்டதடி. (சுஅ)

கன்னியழித்தவனைக்கண்ணாரக்கண்டேண்டி
என்னியல்புநானறியேனீதென்னமாயமடி. (சுகூ)

சொல்லாலேசொல்லுதற்குச்சொல்லவாயில்லையடி
எல்லாருங்கண்டிருந்துமிப்போதறியார்கள். (எ0)

கண்மாயமிட்டாண்டி கருத்துமிழந்தேண்டி
யுண்மாயமிட்டவனையுருவழியக்கண்டேண்டி. (எக)

என்னசொல்லப்போறேனிந்தவதிசயத்தை
கன்னியிளங்கமுகுகாய்த்ததடி கண்ணூர். (௭௨)

ஆர்ந்தவிடமத்தனையுமருளாயிருக்குமடி
சார்ந்தவிடமெல்லாஞ்சைவர்க்குமணக்குதடி. (௭௩)

இந்தமணமெங்குமியற்கைமணமென்றறிந்து
அந்தச்சாதீதத்தருட்கடலில்மூழ்கினண்டி. (௭௪)

இரும்புநிறைநீர்போலவெனைவிழுங்கிக்கொண்டாண்டி
அரும்புநிறைவாசனைபோலன்றேயிருந்தாண்டி. (௭௫)

அக்கினிகர்ப்பூரத்தையறவிழுங்கிக்கொண்டாற்போல்
மக்கினம்பட்டுள்ளேமருவியிருந்தாண்டி. (௭௬)

கடல்நீருமாறும்போற்கலந்துக்கரைசரானேண்டி
உடலுமுயிரும்போலுட்கலந்துநின்றாண்டி. (௭௭)

பொன்னுமுரைமாற்றும்போற்பொருவரியபூரணன்காண்
மன்னுமநுபூதியடிமாணிக்கத்துள்ளொளிபோல். (௭௮)

கங்குகரையில்லாண்டி கரைகாணக்கப்பலடி
எங்குமளவில்லாண்டியேகமாய்நின்றாண்டி. (௭௯)

தீவகம்போலென்னைச்சேர்ந்தபரசின்மயன்காண்
பாவகமொன்றில்லாண்டிபார்த்திடமெல்லாம்பரன்காண். (௮0)

உள்ளார்க்குமுள்ளாண்டியுருமில்லான்பேருமில்லான்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி. (௮௧)

அப்பிறப்புக்கெல்லாம்அருளாயமர்ந்தாண்டி
இப்பிறப்பில்வந்தானிவனேகுருமெய்ப்பொருள்காண். (௮௨)

நீரொளிபோலெங்குநிறைந்தநிராமயன்காண்
பாரொளிபோலெங்கும்பரந்தபராபரன்காண். (௩)

நூலாலுணர்வரியநுண்மையினுநுண்மையன்காண்
பாலூருசர்க்கரைபோற்பரந்தபரிபூரணன்காண். (௪)

உளக்கண்ணுக்கல்லாதூன்கண்ணுக்கோருமதோ
விளக்குச்சுடரொளிபோன்மேவியிருந்தாண்டி. (௫)

கல்லுளிருந்தகனலொளிபோற்காரணமாய்ப்
புல்லியிருந்தும்பொருவரியபூரணன்காண். (௬)

பொற்பூவும்வாசனைபோற்போதம்பிறந்தார்க்குக்
கற்பூவும்வாசனைபோற்காணுக்கியவருக்கு. (௭)

மைக்குழம்புமுத்தும்போன்மருவிமறவாதவர்க்குக்
கைக்குட்கனியாகுங்கருவறுத்தகாரணர்க்கு. (௮)

பளிங்கிற்பவளமடிபற்றற்றபாவலர்க்குக்
கிளிஞ்சிலைவெள்ளியென்பார்கிட்டாதார்கிட்டுவரோ. (௯)

எட்டுக்கடங்காண்டியெழுத்திற்பிறவாண்டி
நாட்டினரிகளெல்லாநற்புரவிசெய்தாண்டி. (௰)

பஞ்சப்பிரளயத்துமிஞ்சியிருப்பாண்டி
நஞ்சுபொதிமிடற்றுநயனத்தழல்விழியான். (௧௧)

அகங்காக்கும்புறங்காக்கும்அளவிலாவண்டமுதல்
செகங்காக்குங்காணுத்திசைபடைத்துங்காக்குமடி. (௧௨)

பேசாப்பிரமமடிபேச்சிறந்தபேரொளிகாண்
ஆசபாசங்கள்அணுகாதபேரொளிகாண். (௧௩)

தேசமிறந்தவன்காண் திசையிறந்தெண்கடல்காண்
ஊசிமுனையூன்றவில்லாவுறுபொருள்காண். (௯௪)

சிப்பியின்முத்தொளிகாண் சின்மயநோக்கில்லார்க்கு
அப்பிலொளிபோலமர்ந்தவரும்பொருள்காண். (௯௫)

ஆலாவிருட்சமடி யளவிலாச்சாகையடி
மேலாம்பதங்கள்விசும்பூடுருவுமெய்ப்பொருள்காண். (௯௬)

லங்கிஷமெல்லாங்கடந்துமருவாமலர்ப்பதங்காண்
அங்குஷமாயெங்கும்ஆய்ந்தவரும்பொருள்காண். (௯௭)

நாமகட்டமானதடி நவில்விடமில்லையடி
காமனைக்கண்ணாலெரிக்கக்கனல்விழித்தகாரணன்காண். (௯௮)

கொட்டாதசெம்பொன்னடி குளியாத்தரளமடி
எட்டாதகொம்பிலடியீப்புகாத்தேனமுதம். (௯௯)

காணிப்பொன்னாணியுடன்கல்லுவைரமாற்றின்னதென்றே
ஆணியுடன்கூட்டியடங்கவிட்டுக்கொண்டாண்டி. (௧00)

அளவிறந்தவண்டத்தாரத்தனைபேருண்டாலும்
பிளவளவுந்தான்சற்றும்பேசாப்பிரமமடி. (௧0௧)

கன்னெஞ்சினுள்ளேகழுநீலம்பூத்தாப்போல்
என்னெஞ்சினுள்ளேயிணையடிகள்வைத்தாண்டி. (௧0௨)

வேதப்புரவியடி விரைந்தோடியும்மறியார்
காதற்றஞானமடி காண்பார்கருத்துடையோர். (௧0௩)

பாசவினையைப்படப்பார்த்தபார்வையுடன்
நேசத்தைதக்காட்டியடி நில்லென்றுசொன்னாண்டி. (௧0௪)

ஓசையொடுங்குமிடமோங்காரத்துள்ளொளிகாண்
பேசாதிருக்கும்பிரமமிதுவென்றாண்டி. (௧௦௫)

சின்மயநன்றோக்காற்சிற்சுருபங்காட்டியெனைத்
தன்மயமாயாக்கியேதானவனாய்நின்றாண்டி. (௧௦௬)

தானென்னைப்பார்த்தாண்டி தன்னைத்தானல்லாமல்,
நானென்னசொல்லுவண்டி நவிலவிடமில்லையடி. (௧௦௭)

இன்றிருந்துநாளைக்கிறக்கிறபேரெல்லாரும்
என்றும்பரிபூரணத்திலினிதிருக்கச்சொன்னாண்டி. (௧௦௮)

பார்க்கிலெளிதலவோபற்றற்றபற்றலவோ
ஆர்க்குமிடங்காட்டவவனிதனில்வந்தாண்டி. (௧௦௯)

இத்தனைகாலமடியிறந்துபிறந்ததெல்லாம்
இத்தனையுமில்லையடியிரும்பிலுறைநீரானேன். (௧௧௦)

எக்காலம்பட்டதடியிறந்துபிறந்ததெல்லாம்
அக்காலமெல்லாமழுந்தினேனானாகில். (௧௧௧)

காலங்கழிந்ததடி கர்மமெல்லாம்போச்சுதடி
நாலுவகைக்கருவுநாமநட்டமாச்சுதடி. (௧௧௨)

முப்பாழுக்கப்பால்முதற்பாழ்முழுமுதலாய்
இப்போதுவந்தான்காணென்னைவிழுங்கிக்கொண்டுநின்றான். ()

பாலின்கணெய்யிருந்தாற்போலப்பரஞ்சோதி
ஆலிங்கனஞ்செய்தறவிழுங்கிக்கொண்டாண்டி. (௧௧௪)

தெத்தபடமானேண்டி நீயிரும்பினீரானேன்
ஒத்தவிடாரித்திரையென்றேதுமுணர்வறிந்தேன். (௧௧௫)

ஒப்புமுவமையுமற்ரேர் தவிர்த்தாய்பொருள்
இப்பூவினிற்குருவேயென்னவந்தோன்ருள்வாழி. (கசஉ)

ஒப்பாரிசொல்லிடினுமுவமைபிலழத்திடினும்
மூப்பாமுங்கற்றுணர்ந்தோர்முன்னேர்பொறுத்தருள்வார். (கசஎ)

திருட்புலம்பல் — முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## இறந்தகாலத்திரங்கல்.

---

வார்த்தைதிறமில்லாமனிதருக்குப்புன்சொல்லாஞ்
சாத்திரங்கள்சொல்லிச்சதுரிழந்துகெட்டேனே. (க)

மெத்தமெத்தச்செல்வாக்கில்வேறுமருளடுத்துத்
தத்தித்தலைகீழாய்த்தானடந்துகெட்டேனே. (உ)

வழக்கந்தலங்களினுமண்பொன்ஞ்சையினும்
பழக்கந்தவிராமற்பதியிழந்துகெட்டேனே. (ங)

ஆணிபொருந்துமரும்பூமியத்தனையுங்
காணிநம்தென்றுகனம்பேசிக்கெட்டேனே. (ச)

ஆசாரமில்லாவசடருடன்கூடிப்
பர்சாங்குபேசிப்பதியிழந்துகெட்டேனே. (ரு)

குருமார்க்கமில்லாக்குருட்டருடன்கூடிக்
கருமார்க்கத்துள்ளேகருத்தழிந்துகெட்டேனே. (சு)

ஆலமருந்துமான்பெருமையெண்ணுமல்
பாலர்பெண்டீர்மெய்யென்றுபதியிழந்துகெட்டேனே. (எ)

பிணவாசமுற்றபெருங்காயமெய்யென்று
புணவாசையாலேபதியிழந்துகெட்டேனே. (அ)

கண்டபுலவர்கனக்கவேதான்புகழ்
உண்டவுடம்பெல்லாமுப்பிரித்துகெட்டேனே. (கூ)

எண்ணிறந்தசென்மமெடுத்துச்சிவபூசை
பண்ணிப்பிழையாமற்பதியிழந்துகெட்டேனே. (க0)

சிற்றெறும்புசற்றுந்தீண்டப்பொறுவுடம்பை
உற்றுறுக்கவுஞ்சுடவுமொப்பித்துமாண்டேனே. (கக)

தன்னுடம்புதானேதனக்குப்பகையாமென்
றெண்ணுமுணர்வில்லாமலின்பமென்றுமாண்டேனே. (கஉ)

தோலெலும்புமாமிசமுந்திரள்ளென்த்தால்விளரு
மேலெலும்புஞ்சுற்றமென்றுவீறுபபாய்மாண்டேனே. (கங)

போக்குவரத்தும்பொருள்வரத்துங்காணுமல்
வாக்கழிவுசொல்லிமனமறுகிக்கெட்டேனே. (கச)

இ ர ங் த க ா ல த் தி ர ங் க ல்

முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## நெஞ்சொடுபுலம்பல்.

மண்காட்டிப்பொன்காட்டிமாயவிருள்காட்டிச்
செங்காட்டிலாடுகின்றதேசிகனைப்போற்றுமல்
கண்காட்டும்வேசியர்தங்கண்வலையிற்சிக்கிமிக
அங்காடிநாய்போலலைந்தனையேநெஞ்சமே. (க)

புட்பாசனவணையிற்பொர்பட்டுமெத்தையின்மேல்
ஒப்பாவணிந்தபணியோடாணிநீங்காமல்
இப்பாய்க்கிடத்தியமனுயிர்கொள்ளுமுன்னே
முப்பாழைப்போற்றிமுயங்கிலையேநெஞ்சமே. (உ)

முப்பாழும்பாழாய்முதற்பாழ்வெறும்பாழாய்
அப்பாழுக்கப்பானின்றுமெனைத்தப்போற்றாமல்
இப்பாழாம்வாழ்வைநம்பியேற்றவர்க்கொன்றீயாமல்
துப்பாழாய்வந்தவினைசூழ்ந்தனையேநெஞ்சமே. (௩)

அன்னம்பகிர்ந்திங்கலைந்தோர்க்குதவிசெய்யுஞ்
சென்மமெடுத்துஞ்சிவனருளைப்போற்றாமல்
பொன்னுமனையுமெழிற்பூவையரும்வாழ்வுமிவை
இன்னுஞ்சதமாகவெண்ணினையேநெஞ்சமே. (௪)

முற்றொடர்பிற்செய்தமுன்னைநன்மையால்வந்தசெல்வம்
இற்றைநாட்பெற்றோமென்றெண்ணுதுப்பாழ்மனமே
அற்றவர்க்குமீயாமலரன்பூசையோராமல்
கற்றவர்க்குமீயாமற்கண்மறந்துவிட்டனையே. (௫)

மாணிக்கமுத்துவயிரப்பணிபூண்டு ---
ஆணிப்பொன்சிங்காதனத்திலிருந்தாலும்
காணித்துடலைநமன்கட்டியேழைதப்பிடித்தால்
காணிப்பொன்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே. (௬)

தற்கட்டுமோதிரநற்கடுக்கனரைஞாண்பூண்டு
இக்கெட்டும்போற்றத்திசைக்கொருத்தரானாலும்
பற்கிட்டவேமனுயிர்பற்றும்வேளையிலே
கைச்சட்டம்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே. (௭)

முன்னநீசெய்ததவமுப்பாலுஞ்சேருமன்றிப்
பொன்னும்பணிதிகளும்பூஷணமுங்கூடவருமோ
தன்னைச்சதமாகச்சற்குருவைப்போற்றாமல்
கண்ணற்றவந்தகன்போற்காட்சியற்றாய்நெஞ்சமே. (௮)

ஷபயரவம்பூண்டபரமர்திருப்பொற்றாளைத்
தூயமலர்பறித்துத்தொழுதுவணங்காமல்
கையிலணிவளையுங்காலிலிடும்பாடகமும்
மெய்யென்றிறுமாந்துவிட்டனையேநெஞ்சமே. (௯)

மாதுக்கொருபாகம்வைத்தவரனைப்பொற்றாளைப்
போதுக்கொருபோதும்போற்றிவருந்தாமல்
வாதுக்குத்தேடியிந்தமண்ணிற்புதைத்துவைத்தே
ஏதுக்குப்போகநீயெண்ணினையேநெஞ்சமே. (௰)

அஞ்சருளைப்போற்றியைந்துபுலனைத்துறக்க
நெஞ்சேயுனக்குநினைவுநான்சொல்லுகிறேன்
வஞ்சகத்தைநீக்கிமறுநினைவுவராமல்
செஞ்சரணத்தாளைச்சிந்தைசெய்வாய்நெஞ்சமே. (௰௧)

அற்புதமாயிந்தவுடலாவியங்குறுவினை
சற்குருவைப்போற்றித்தவம்பெற்றுவாழாமல்
உற்பத்திசெம்பொன்உடைமைப்பெருவாழ்வைவிரும்பிச்
சர்ப்பத்தின்வாயிற்றவளைபோலானேனே. (௰௨)

உற்றாரார்பெற்றாருடன்பிறப்பார்பிள்ளைகளார்
மற்றாரிருந்தாலென்மாளும்போதுதவுவரோ
கற்றாவிழந்தவிளங்கன்றதுபோலுருகிச்
சிற்றுசிச்சிற்றின்பஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௰௩)

வீடிருக்கத்தாயிருக்கவேண்டுமனையாளிருக்கப்
பீடிருக்கவூணிருக்கப்பிள்ளைகளுந்தாமிருக்க
மாடிருக்கக்கன்றிருக்கவைத்தபொருளிருக்கக்
கூடிருக்கநீபோனகோலமென்னகோலமே (கச)

சந்தனமுங்குங்குமமுஞ்சாந்தும்பரிமளமும்
விந்தைகளாப்பூசிமிகுவேடிக்கையொய்யாரக்
கந்தமலர்சூடுகின்றகன்னியருந்தாமிருக்க
எந்தவகைபோனாயென்றெண்ணிலையேநெஞ்சமே. (கரு)

காற்றுத்துருத்திகடியவினைக்குள்ளான
ஊற்றைநச்சடலத்தையுண்டென்றிறுமாந்து
பார்த்திரங்கியன்னம்புசித்தோருக்கீயாமல்
ஆற்றுவெள்ளம்போலவளர்வினையேநெஞ்சமே (கசு)

நீர்க்குமிழிவாழ்வைநம்பிநித்தியமென்றேயெண்ணிப்
பாக்கள்வாமன்னம்பசித்தோர்க்களியாமல்
போர்க்குளெமதூதன்பிடித்திழுக்கும்போது
ஆர்ப்புவாரென்றேயறிந்திலையேநெஞ்சமே (கஎ)

சின்னஞ்சிறுநுதலாள்செய்தபலவினையும்
முன்னந்தமார்பின்முலைக்கிலக்கில்விம்மி
வன்னந்தளதளப்புமயங்கிவலைக்குள்ளாகி
அன்னம்பகிர்ந்துண்ணவறிந்திலையேநெஞ்சமே (கஅ)

ஓட்டைத்துருத்தியினையுடைய்ப்புழுக்கூட்டை
ஆட்டுஞ்சிவசித்தருளைமிகப்போற்றியே
வீட்டைத்திறந்துவெளியைவெளியாவறிந்துக்
காட்டும்பொருளிதென்றுகருதிலையேநெஞ்சமே (ககூ)

ஊன்பொதிந்தகாயமுழைந்தபுழுக்கூட்டைத்
தான்சுமந்ததல்லால்நீசற்குருவைப்போற்றாமல்
கான்பரந்தவெள்ளங்கரைபுரளக்கண்டேகி
மீன்பார்த்தாற்போலேவிசாரமுற்றாய்நெஞ்சமே. (உ0)

உடக்கையொருக்கியுயிரடைத்துவைத்த
சடக்கைச்சதமென்றுசார்ந்தங்கிறுமாந்தனை
உடக்கைத்தகர்த்தேயுயிரையமன்கொள்கையிலே
யடக்கமாய்வைத்தபொருளங்குவாராதே. (உக)

இத்திக்குந்தேனைத்தெவிட்டாததெள்ளமுதை
முத்திக்குவித்தானைமுப்பாழைப்போற்றாமல்
பற்றிப்பிடித்தியமன்பாசத்தாற்கட்டும்வண்ணம்
சுற்றியிருக்கும்வினைசூழ்ந்தனையேநெஞ்சமே. (உஉ)

அஞ்செழுத்தாயெட்டெழுத்தாயைம்பத்தோரக்கரமாய்ப்
பிஞ்செழுத்தாய்நின்றபெருமானைப்போற்றாமல்
வஞ்சகமாயுற்றமுலைமாதர்வலைக்குள்ளாகிப்
பஞ்சரித்துத்தேடிப்பாழுக்கிறைத்தேனே. (உங)

அக்கறுகுகொன்றைதும்பையம்புலியுஞ்சூடுகின்ற
சொக்கர்திருத்தாளைத்தொழுதுவணங்காமல்
மக்கள்பெண்டிர்சுற்றமுடன்வாழ்வைமிகநம்பியென்றும்
எக்காலமுமுண்டென்றெண்ணினையேநெஞ்சமே. (உச)

ஆண்டகுருவினருளைமிகப்போற்றி
வேண்டுகயிலாயவீட்டுவழிபாராமல்
பூண்டகுழன்மாதர்பொய்மாயைக்குள்ளாகித்
தூண்டிலகப்பட்டுத்துடிக்கெண்டையானேனே. (உரு)

எணிப்பழுவாமிருளையறுத்தாளுமேற்றும்
பேணித்தொழுங்கயிலைப்பேறுபெறமாட்டாமல்
காணவரும்பொருளாய்க்கண்கலக்கப்பட்டடியேன்
ஆணியற்றமாமரம்போலாகினனேநெஞ்சமே. (௨௬)

கோத்துப்பிரகாசங்கொண்டுருகியுண்டமெல்லாம்
காத்தபடியேகயிலாயஞ்சேராமல்
வேற்றுருவப்பட்டழுதேயுன்வெள்ளம்போலுள்ளுருகி
ஏற்றுங்கழுவிலிருந்தபிணமானேனே. (௨௭)

நிலைவிட்டுடலையுயிர்நீங்கியுதலுமுன்னே
சிலைதொட்டவேடனெச்சிற்றின்றானைச்சேராமல்
வலைபட்டுழலுகின்றமான்போற்பரிதவித்து
தலைகெட்டநூலதுபோற்சிக்குற்றாய்நெஞ்சமே. (௨௮)

முடிக்குமயிர்ப்பொல்லாமுழுக்குரம்பைப்பின்றிரிந்து
இடைக்குநடைக்குமிகுத்துக்கொண்டவிழ்த்துச்சொல்லி
அடிக்கொண்டதில்லைவனைத்தொழுதேனாயினையேன்
விட்டைக்கையிழந்தமிருகமதாயினேனே. (௨௯)

பூவாணர்போற்றும்புகழ்மதுரைச்சொக்கநாதன்
சீர்பாதம்போற்றிச்சிவலோகஞ்சேராமல்
தாவாரந்தோன்றுந்தலைபுகுந்தாம்பேரலே
ஆவாநெஞ்சமேயலைந்துதிரிந்தாயே. (௩௦)

பத்தெட்டாயீரைந்தாய்ப்பதின்மூன்றிரண்டொன்றாய்
ஒத்திட்டுநின்றதோரோவியத்தைப்போற்றாமல்
தெத்திட்டுநின்றதிரிகண்ணுள்ளாக
வீழ்ந்திட்டாய்நெஞ்சேவிதிவழியாலே. (௩௧)

அஞ்சுமுருவாங்கிளைமூன்றுமெய்ப்பொருளாய்
மிஞ்சியிருந்தவிளக்கொளியைப்போற்றாமல்
பஞ்சில்லிடுவன்னியைப்போற்பற்றிப்பிடியாமல்
நஞ்சுண்டகெண்டையைப்போல்நானலைந்துகெட்டேனே. (௯௨)

ஊனமுடனேயுடையும்புழுக்கூட்டை
மானமுடனேசுமந்துமண்ணுலகின்மாளாமல்
ஆனதொருபஞ்சவர்களாண்டிருந்ததேசம்விட்டுப்
போனதுபோலேநாம்போய்ப்பிழைத்தோமில்லையே. (௯௩)

ஊறையிறைக்கின்றவுப்பிருந்தபாண்டத்தை
நாறுமலநாறிநழுவும்புழுக்கூட்டை
வீறும்புரத்தைவிரும்புகின்றதேப்படியென்
றூறுதனாட்டிலகன்றிருந்தேனில்லையே. (௯௪)

அரியவரிதேடியறியாவொருமுதலைப்
பரிவுடனேபோற்றும்பரஞ்சுடரைப்போற்றாமல்
கரியபெருவாழ்வைநம்பிக்காமத்தழுந்தியே
அரிவாயிற்பட்டகரியதுபோலானேனே. (௯௫)

தந்திரத்தையுன்னித்தவத்தைமிகநிறுத்தி
மந்திரத்தையுன்னிமயங்கித்தடுமாறி
விந்துருகிநாதமாமேலொளியைக்காணாமல்
அந்தரத்தேகோலெறிந்தவந்தகன்போலானேனே. (௯௬)

விலையாகிப்பாணனுக்குவீறடிமைப்பட்டதுபின்
சிலையார்கைவேடனெச்சிற்றின்றானைப்போற்றாமல்
அலைவாய்த்துரும்பதுபோலாணவத்திலாழ்ந்து
புலைவாய்மெழுகதுபோலுருகினையேநெஞ்சமே. (௯௭)

நெஞ்சொடுபுலம்பல் முற்றிற்று.

## பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த
## பூரணமாலை.

மூலத்துதித்தெழுந்தமுக்கோணசக்கரத்துள்
வாலைதனைப்போற்றாமல் மதிமறந்தேன்பூரணமே. (௧)

உந்திக்கமலத்துதித்துநின்றபிரமாவைச்
சந்தித்துக்காணமற்றட்டழிந்தேன்பூரணமே. (௨)

நாவிக்கமலநடுநெடுமோல்காணாமல்
ஆவிகெட்டியானுமறிவழிந்தென்பூரணமே. (௩)

உருத்திரனையிருதயத்திலுண்மையுடன்பாராமல்
கருத்தழிந்துநானுங்கலங்கினேன்பூரணமே. (௪)

விசுத்திமயேசுரனைவிழிதிறந்துபாராமல்
பசித்துருகிநெஞ்சம்பதறினேன்பூரணமே. (௫)

நெற்றிவிழியுடையசிர்மலசதாசிவத்தைப்
புத்தியுடன்பாராமற்பொறியழிந்தேன்பூரணமே. (௬)

நாதவிந்துதன்னைநயமுடனேபாராமல்
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே. (௭)

உச்சிவெளியையுறுதியுடன்பாராமல்
அச்சமுடனானுமறிவழிந்தேன்பூரணமே. (௮)

மூக்குமுனையைமுழித்திருந்துபாராமல்
ஆக்கைகெட்டுநானுமறிவழிந்தேன்பூரணமே. (௯)

இடைபிங்கலையினியல்பறியமாட்டாமல்
தடையுடனேயானுந்தயங்கினேன்பூரணமே. (௧௦)

ஊனுக்குணீநின்றுலாவினதைக்காணாமல்
நானென்றிருந்துநலனழிந்தேன்பூரணமே. (௧௧)

மெய்வாழ்வைநம்பிவிரும்பிமிகவாழாமல்
பொய்வாழ்வைநம்பிப்புலம்பினேன்பூரணமே. (௧௨)

பெண்டுபிள்ளைதந்தைதாய்பிறவியுடன்சுற்றமிவை
யுண்டென்றுநம்பியுடலழிந்தேன்பூரணமே. (௧௩)

தண்டிகைபல்லாக்குடனேசகலசம்பத்துகளும்
உண்டென்றுநம்பியுணர்வழிந்தேன்பூரணமே. (௧௪)

இந்தவுடலுயிரையெப்போதுந்தான்சதமாப்
பந்தமுற்றுநானும்பதமழிந்தேன்பூரணமே. (௧௫)

மாதர்பிரபஞ்சமயக்கத்திலேவீழ்ந்து
பேதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே. (௧௬)

சரியைகிரியாயோகந்தான்ஞானம்பாராமல்
பரிதிகண்டமதியதுபோற்பயனழிந்தேன்பூரணமே. (௧௭)

மண்பெண்பொன்னாசைமயக்கத்திலேவீழ்ந்து
கண்கெட்டமாடதுபோற்கலங்கினேன்பூரணமே. (௧௮)

தனிமுதலைப்பார்த்துத்தனித்திருந்துவாழாமல்
அனியாயமாய்ப்பிறந்திங்கலைந்துநின்றேன்பூரணமே. (௧௯)

ஈராறுதன்கலைக்குளிருந்துகூத்தாடினதை
ஆராய்ந்துபாராமலறிவழிந்தேன்பூரணமே. (௨௦)

வாசிதனைப்பார்த்துமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
காசிவரைபோய்த்திரிந்துகாலலுத்தேன்பூரணமே. (௨௧)

கருவிகொண்டாற்றுறிற்கலந்தவிழையுடனே
இருவிழியாற்பாராமலீடழிந்தேன்பூரணமே. (௨௨)

உடலுக்குள்நீநின்றுலாவினதைக்காணுமல்
கடலலைதோறுந்திரிந்துகாலலுத்தேன்பூரணமே. (௨௩)

எத்தேசகாலமுநாமிறவாதிருப்பமென்று
உற்றுனைத்தான்பாராமலுருவழிந்தேன்பூரணமே. (௨௪)

எத்தனைதாய்தந்தையிவர்களிடத்தேயிருந்து
பித்தனாயானும்பிறந்திறந்தேன்பூரணமே. (௨௫)

பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்யானுமுன்றன்
பொற்றுணைத்தாள்தந்துபுகலருள்வாய்பூரணமே. (௨௬)

உற்றாருழுதலுத்தாருறன்முறையார்சுட்டலுத்தார்
பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்பூரணமே. (௨௭)

பிரமன்படைத்தலுத்தான்பிறந்திறந்துநானலுத்தேன்
உரமுடையவக்கினிதானுண்டலுத்தான்பூரணமே. (௨௮)

எண்பத்துநான்குநூறாயிரஞ்செனனமுஞ்செனித்துப்
புண்பட்டொனும்புலம்பினேன்பூரணமே. (௨௯)

என்னையறியாமலெனக்குள்ளேநீயிருக்க
உன்னையறியாதுடலழிந்தேன்பூரணமே. (௩௰)

கருவாயுருவாய்க்கலந்துலகெல்லாநீயாய்
அருவாகிநின்றதறிகிலேன்பூரணமே. (௩௧)

செம்பொற்கமலத்திருவடியைப்போற்றாமல்
வம்பைப்பகொட்டவாழிம்பகாரனேன்பூரணமே. (௩௨)

எனக்குள்ளேநீயிருக்கவுனக்குள்ளேநானிருக்க
மனக்கவலை தீரவரமருள்வாய்பூரணமே. (௩௩)

எழுவகைத்தோற்றத்திருந்திவ்வையாடினைத்தப்பி
பழுதறவேபாராமற்பயனிழந்தேன்பூரணமே. (௩௪)

சாதிபேதங்கள்தனையறியமாட்டாமல்
வாதனையால்நின்றுமயங்கினேன்பூரணமே. (௩௫)

குலமொன்றாய்நீபடைத்தகுறியறியாமலியான்
மலபாண்டத்துள்ளிருந்துமயங்கினேன்பூரணமே. (௩௬)

அண்டபிண்டமெல்லாமணுவுக்கணுவாய்நீ
கொண்டவடிவின்குறிப்பறியேன்பூரணமே. (௩௭)

சகஸ்திரத்தின்மேலிருக்குஞ்சற்குருவைப்போற்றாம
லகத்திலுடையாணவத்தால்நிலையழிந்தேன்பூரணமே. (௩௮)

ஐந்துபொறியையடக்கியுனைப்போற்றாமல்
நைந்துருகிநெஞ்சநடுங்கினேன்பூரணமே. (௩௯)

என்னைத்திருக்கூத்தாலிப்படிநீயாட்டுவித்தாய்
உன்னையறியாதுடலழிந்தேன்பூரணமே. (௪௰)

நரம்புதசைதோலெலும்புநாற்றத்துக்குள்ளிருந்து
வரம்பறியமாட்டாமல்மயங்கினேன்பூரணமே. (௪௧)

இலங்கியுடைநூல்போற்சிவசெந்துக்குள்ளிருந்த
நலந்தனைத்தான்பாராமல்நலிமிகுந்தேன்பூரணமே. (௪௨)

குருவாய்ப்பரமாகிக்குடிலைசத்திநாதவிந்தாய்
அருவாயுருவானதறிகிலேன்பூரணமே. (௪௩)

ஒளியாய்க்கதிர்மதியாயுள்ளிருளாயக்கினியாய்
வெளியாகிநின்றவியனறியேன்பூரணமே. (௪௪)

இடையாகிப்பிங்கலையாயெழுந்தசுழுமுனையாய்
உடலுயிராய்நீயிருந்தவுளவறியேன்பூரணமே. (௪௫)

மூலவித்தாய்நின்றுமுளைத்துடல்தோறும்மிருந்து
காலனெனவழிக்குங்கணக்கறியேன்பூரணமே. (௪௬)

உள்ளும்புறம்புமாயுடலுக்குள்நீயிருந்த
தெள்ளவுநானறியாதிருந்தேனேபூரணமே. (௪௭)

தாயாகித்தந்தையாய்த்தமர்கிளைஞர்சுற்றமெல்லாம்
நீயாகிநின்றநிலையறியேன்பூரணமே. (௪௮)

விலங்குபுள்ளூர்வனவசரம்விண்ணவர்நீர்ச்சாதிமனுக்
குலங்களெழுவகையில்நின்றகுறிப்பறியேன்பூரணமே. (௪௯)

ஆணாகிப்பெண்ணாயலியாகிவேற்றுருவாய்
மாணாகிநின்றவகையறியேன்பூரணமே. (௫௦)

வாலையாய்ப்பக்குவமாய்வளர்ந்துகிழந்தானும்
பாலையாய்நின்றபயனறியேன்பூரணமே. (௫௧)

பொய்யாய்ப்புவியாய்ப்புகழ்வாரிதியாகி
மெய்யாகிநின்றவியனறியேன்பூரணமே. (௫௨)

பூவாய்மணமாகிப்பொன்னாகிமாற்றாகி
நாவாய்ச்சொல்லானநயமறியேன்பூரணமே. (௫௩)

முதலாய்நடுவாகிமுப்பொருளாய்மூன்றுலகர்
பிதமாகிநின்றவியலறியேன்பூரணமே. (௫௪)

ஊனாயுடலுயிராயுண்ணிறைந்தகண்ணொளியாய்த்
தேனாய்ருசியானதிறமறியேன்பூரணமே. (௫௫)

வித்தாய்மரமாய்விளைந்தகனிகாய்ப்பூவாய்ச்
சித்தாகிநின்றதிறமறியேன்பூரணமே. (௫௬)

ஐவகையும்பெற்றுலகவண்டபகிரண்டமெல்லாந்
தெய்வமெனநின்றதிறமறியேன்பூரணமே. (௫௭)

மனமாய்க்கனவாகிமாயையாயுள்ளிருந்து
நினைவாகிநின்றநிலையறியேன்பூரணமே. (௫௮)

சத்திசிவமிரண்டாய்த்தான்முடிவிலொன்றாகிச்
சித்திரமாய்நின்றதிறமறியேன்பூரணமே. (௫௯)

பொறியாய்ப்புலனாகிப்பூதபேதப்பிரிவாய்
அறிவாகிநின்றவளவறியேன்பூரணமே. (௬௦)

வானிற்கதிர்மதியாய்வளர்ந்துபின்னொன்றானதுபோல்
ஊனுடலுக்குள்ளிருந்தவுயிர்ப்பறியேன்பூரணமே. (௬௧)

பொய்யும்புலையுமிகப்பொருந்திவீணேபேசலன்றி
ஐயோவுனையுரைக்கவறிகிலேன்பூரணமே. (௬௨)

நிரந்தரமாயெங்குநின்றுவிளையாடினனைத்ப்
பரமதுவேயென்னப்பதமறியேன்பூரணமே. (௬௩)

கொல்வாய்பிரப்பாய்க்கூட்டுவிருந்தேதகிப்பாய்
செல்வாய்பிறர்க்குச்செயலறியேன்பூரணமே. (௬௪)

வாரிதியாய்வையமெல்லாமன்னுமண்டபிண்டமெல்லாஞ்
சாருதியாய்நின்றதலமறியேன்பூரணமே. (௬௫)

ஆதியென்பாரந்தமென்பாரத்தகுணடுவாயிருந்த
சோதியென்பார்நாதத்தொழிலறியார்பூரணமே. (எஎ)

மூச்சென்பாருள்ளமென்பார்மோனமெனுமோட்சமென்பார்
பேச்சென்பாருன்னுடையபேரறியார்பூரணமே. (எஅ)

புரமென்பார்பானுவென்பார்பாழ்வெளியாய்நின்ற
வரமென்பாருன்றன்வழியறியார்பூரணமே. (எகூ)

எத்தனைபேரோவெடுத்தெடுத்துத்தானுரைத்தார்
அத்தனைபேர்க்கொன்றுன்றரிகிலேன்பூரணமே. (அ0)

நகாரமகாரமென்பார்சிவேசிகாரமென்பார்
வகாரயகாரமென்பார்வகையறியார்பூரணமே. (அக)

மகத்துவமாய்க்காமமயக்கத்துக்குள்ளிருந்து
பகுத்தறியமாட்டாமற்பயன்ழிந்தேன்பூரணமே. (அ௨)

உண்மைப்பொருளையுகந்திருந்துபாராமற்
பெண்மயக்கத்தாலேபிறந்திறந்தேன்பூரணமே. (அ௩)

வாயாரவாழ்த்திமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
காயமெடுத்துக்கலங்கினேன்பூரணமே. (அச)

சந்திரனைமேகமதுதான்மறைத்தவாறதுபோற
பந்தமுறயானுமுனைப்பார்க்கிலேன்பூரணமே. (அரு)

செந்தாமரைத்தாளைத்தினந்தினமும்போற்றாமல்
அந்தரமாய்நின்றிவ்விளைக்கேதனென்பூரணமே. (அசு)

நீர்மேற்குமிழிபோல்நிலையற்றகாயமிதைத்
தாரகமென்றெண்ணினான்றட்டழிந்தேன்பூரணமே. (அஎ)

நெஞ்சமுருகிநினைந்துனைத்தான்போற்றிநெடு
வஞ்சகத்தைப்போக்கவகையறியேன்பூரணமே. (௮)

எள்ளுக்குளெண்ணெய்போலெங்குநிறைந்திருந்த
துள்ளமறியாதிருகினேன்பூரணமே. (௯)

மாயாப்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்தே
யோயாச்சனனமொழித்திலேன்பூரணமே. (௧௦)

பூசையுடன்புவனபோகமெனும்போக்கியத்தால்
ஆசையுற்றேநானுமறிவழிந்தேன்பூரணமே. (௧௧)

படைத்துமழித்திடுவாய்பார்க்கிற்பிரமரவெழுத்தைத்
தொடைத்துச்சிரஞ்சீவியுறத்துலங்குவிப்பாய்பூரணமே. (௧௨)

மந்திரமாய்ச்சாத்திரமாய்மறைநான்காய்நீயிருந்த
தந்திரத்தைநானறியத்தகுமோதான்பூரணமே. (௧௩)

அல்லாய்ப்பகலாயனவரதகாலமெனுஞ்
சொல்லாய்ப்பகுத்ததொடர்பறியேன்பூரணமே. (௧௪)

நரகஞ்சுவர்க்கமெனநண்ணுமிரண்டுண்டாயும்
ஆரதராவென்பதறிகிலேன்பூரணமே. (௧௫)

பாவபுண்ணியமென்னும்பகுப்பாய்ப்படைத்தழித்திங்
காவலையுண்டாக்கிவைத்தவருளறியேன்பூரணமே. (௧௬)

சாந்தமென்றுங்கோபமென்றுஞ்சாதிபேதங்களென்றும்
யாந்தமென்றும்புத்தியென்றும்படைத்தனையேபூரணமே. (௧௭)

பாசமுடலாய்ப்பசுவதுவுந்தானுயிராய்
நேசமுடனீபொருளாய்நின்றனையேபூரணமே. (௧௮)

எதிலடியாரிரங்கியிகத்தில்வந்தான்
பாதமதில்தாழப்பரிந்தருள்வாய்பூரணமே. (கசுக)

நானேநீநீயேநானுமிரண்டுமொன்ருனால்
தேனின்ருசியதுபோற்றெறவிட்டாய்பூரணமே. (க00)

முடிவிலொருசூனியத்தைமுடித்துநின்றுபாராமல்
அடியிலொருசூனியத்திலலைந்தேனேபூரணமே. (க0க)

பூரணமாலைதனைப்புத்தியுடனேதினர்க்குத்
தாரணியில்ஞானந்தழைப்பிப்பாய்பூரணமே. (க0உ)

பூரணமாலை முற்றிற்று.

## நெஞ்சொடுமகிழ்தல்.

அன்றுமுதலின்றளவுமாக்கையொடுகூட்சியுமாய்
நின்றநிலையறியநேசமுற்றாய்நெஞ்சமே. (க)

அங்கங்குணர்வாயறிவாகியேநிறைந்த
எங்கெங்குமானதிலேயேகரித்தாய்நெஞ்சமே. (உ)

அலையாதபேரின்பவானந்தவெள்ளத்தில்
நிலையாயுருவிறந்துநின்றனையேநெஞ்சமே. (ங)

பாராமற்பதையாமற்பருகாமல்யாதொன்றும்
தீராதுணர்வுடனேயொன்றினையேநெஞ்சமே. (ச)

களவிறந்துகொலையிறந்துகாண்பனவுங்காட்சியுமேபோய்
உளவிறந்துநின்றநிலையுற்றாய்நெஞ்சமே. (ரு)

பேச்சிறந்துசுட்டிறந்துபின்னிறந்துமுன்னிறந்து
நீச்சிறந்துநின்றநிலைநேசமுற்றாய்நெஞ்சமே. (௬)

விண்ணிறந்துமண்ணிறந்துவெளியிறந்துவொளியிறந்து
எண்ணிறந்துநின்றநிலையேகரித்தாய்நெஞ்சமே. (௭)

பார்த்தவிடமெங்கும்பரமென்னவேயுட்புறம்புரி
கோர்த்தபடியுண்மையென்கொண்டனையேநெஞ்சமே. (௮)

ஊரிறந்துபேரிறந்துவொளியிறந்துவெளியிறந்து
சீரிறந்துநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (௯)

ஆண்பெண்ணலியென்றழைக்கவரிதாய்நிறைந்து
காணவரிதாயவிடங்கண்ணுற்றாய்நெஞ்சமே. (௧௦)

ஆங்காரமச்சமகற்றியறிவினொடு
தூங்காமற்றூங்கிச்சுகம்பெற்றாய்நெஞ்சமே. (௧௧)

ஆதியாய்நின்றவகண்டபரிபூரணத்தைச்
சாதியாநின்றவிடஞ்சார்வுற்றாய்நெஞ்சமே. (௧௨)

விருப்புவெறுப்பில்லாதவெட்டவெளிதனில்
இருப்பேசுகமென்றிருந்தனையேநெஞ்சமே. (௧௩)

ஆருமுருப்பேரண்டத்தப்புறத்துமிப்புறத்தும்
நீருமுப்புமென்னநிலைபெற்றாய்நெஞ்சமே. (௧௪)

உடனாகவேயிருந்துமுணர்வரியாதே
கடனீருமாறும்போற்கலந்தனையேநெஞ்சமே. (௧௫)

நெடியகத்தைத்தப்போக்கிநின்றக்கழுத்துப்
பழுத்துக்கும்பம்போற்பற்றினையேநெஞ்சமே. (௧௬)

மேலாகியெங்கும்விளங்கும்பரம்பொருளிற்
பாலூறுமென்சுவைபோற்பற்றினையேநெஞ்சமே. (௧௭)

நீரொடுதண்ணளிவிண்டநீரானவாறேபோல்
ஊரொடுபேரில்லானோடொன்றினையேநெஞ்சமே. (௧௮)

இப்பிறப்பைப்பாழ்படுத்தியிருந்தபடியேயிருக்கச்
செப்பவரிதாயவிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௧௯)

மேலாம்பதங்களெல்லாம்விட்டுவிட்டோராய்ந்த
நாலாம்பதத்தினடந்தனையேநெஞ்சமே. (௨௰)

கடங்கடங்கடோறுமிக்கிரவிநீர்போலு
யடங்குமிடந்தானறிந்தன்புற்றாய்நெஞ்சமே. (௨௧)

கற்றவனைக்கேட்டவனைக்காணானைக்காண்பவனை
உற்றவனைநின்றநிலையொன்றுபட்டாய்நெஞ்சமே. (௨௨)

நாலுவகைக்கரணநல்குபுலனைந்துமொன்றாய்ச்
சீலமுற்றுநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (௨௩)

விட்டிட்டுமுந்தொட்டிட்டும்விண்ணிட்டுமண்ணிட்டுங்
கட்டுமொருதன்மையெனக்கண்ணுற்றாய்நெஞ்சமே. (௨௪)

எந்தெந்தநாளுமிருந்தபடியேயிருக்க
அந்தச்சுகாதீதமாகினையேநெஞ்சமே. (௨௫)

வாக்கிறந்துநின்றமனோகோசரந்தனிலே
தாக்கறவேநின்றநிலைதலைசெய்தாய்நெஞ்சமே. (௨௬)

உத்தேசமுதலுமறந்தேயெக்கருவுமிறந்து
சித்தாயசித்தினிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௨௭)

தாழாதேநீளாதேதன்மயம்தாய்நிறைந்து
வீழாதேவாழுமருவினையேநெஞ்சமே. (௨௮)

உள்ளும்புறம்புமுவட்டாதவானந்தக்
கள்ளருந்திநின்றநிலைகண்ணுற்றாய்நெஞ்சமே. (௨௯)

வாதனைபோய்நிஷ்டையும்போய்மாமௌனராச்சியம்போய்
பேதமறநின்றவிடம்பெற்றனையேநெஞ்சமே. (௩௦)

இரதம்பிரிந்துகலந்தேகமாம்வாறேபோல்
விரகந்தவிர்ந்தனல்பால்மேவினையேநெஞ்சமே. (௩௧)

சோதியான்சூழ்பனிநீர்சூறைகொளுமாறேபோல்
நீதிகுருவின்றிருத்தாள்நீபெற்றாய்நெஞ்சமே. (௩௨)

நெஞ்சொடுமகிழ்தல் முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## உடற்கூற்றுவண்ணம்.

தன தன தான, தன தன தான, தந்த தனந்தன தந்த தனந்த
தனன தனந்த, தனன தனந்த, தானன தானன தானதனந்த.

ஒருமடமாதுமொருவனுமாகி, இன்பசுகந்தருமன்புபொருந்தி
புணர்வுகலந்தொழுகியவிந்து, ஊறுசுரோணிதமீதுகலந்து.

பனியிலொர்பாதிசிறுதுளிமாது, பண்டியில்வந்துபுகுந்துதிரண்டு, பதுமவரும்புகமடமிதென்று, பார்வைமெய்வாய்செவிகால்கைகளென்ற.

உருவமுமாகியுயிர்வளர்மாதம், ஒன்பதுமொன்றுநிறைந்துமடந்தை
யுதரமகன்றுபுவியில்விழுந்து, யோகமும்வாரமுநாளுமறிந்து.

மகளிர்கள்சேனைதரவணையாடை, மண்படவுந்தியுதைந்துகவிழ்ந்து
மடமயில்கொங்கையமுதமருந்தி, யோரறிவீரறிவாகிவளர்ந்து.

ஒளிநகையூறலிதழ்மடவாரு, வந்துமுகந்திடவந்துதவழ்ந்து
மடிமிலிருந்துமழலைமொழிந்து, வாவிருபோவெனநாமம்விளம்ப.

உடைமணியாடையரைவடமாட,வுண்பவர்தின்பவர்தங்க ளொடுண்
டு, தெருவிலிருந்து புழுதியளைந்து, தேடியபாலரொடோடிநடந்து
அஞ்சுவயதாகிவிளையாடியே. (க)

உயர்தருஞானகுருஉபதேச, முத்தமிழின்கலையுங்கரைகண்டு
வளர்பிறையென்றுபலரும்விளம்ப,வாழ்பதினாறுபிராயமும்வந்து.

மயிர்முடிகோதியறுபதநீல; வண்டிமிர்தண்டொடைகொண
டைபுனைந்து,மணிபொனிலங்குபணிகளணிந்து, மாகதர்போகதர்கூ
டிவணங்க.

மதனசொரூபனிவனெனமோக, மங்கையர்கண்டுமருண்டுதிர
ண்டு,வரிவிழிகொண்டுசுழியவெறிந்து, மாமயில்போலவர்போவது
கண்டு.

மனதுபொறாமலவர்பிறகோடி, மங்கலசெங்கலசந்திகழ்கொங்கைம
ருவமயங்கிநயங்கண்மொழிந்து, வாடியமாமுதல்சேரவழங்கி.

ஒருமுதலாகிமுதுபொருளாயி, ருந்ததனங்களும்வம்பிலிழந்து
மதனசுகந்தவிதனமிதென்று, வாலிபகோலமும்வேறுபிரிந்து.

வளமையுமாறியிளமையுமாறி, வன்பல்விழுந்திருகண்களிருண்டு
வயதுமுதிர்ந்துநரைதிரைவந்து, வாதவிரோதகுரோதமடைந்து.
செங்கையினிலோர்தடியுமாகியே. (உ)

பல்லரையுமேவிழுதியவூர்தூழி யிருந்தசவுங்கழுவுஞ்சிலரென்று
பணிதுகில்தொங்கல்களபபணிந்து பாவகமேசெய்துநாறுமுடம்பை.

வரிசைகெடாமலெடுமென்றோதி விருதூதி வந்தினமைந்தர்குனிந்துசுமந்து
கடுகிநடந்துசுடலையடைந்து, மாறுடவாழ்வெனவாழ்வெனநொந்து,
விறகிடைமூடி யழல்கொடுபோட, வெந்துவிழுந்துமுறிந்துநிணங்க
ளுருகியெலும்புகருகியடங்கி, யோர்பிடிநீறுமிலாதவுடம்பை,

நம்புமடியேனையினியாளுமே (ரு)

உடற்கூற்றுவண்ணமுற்றிற்று.

பட்டினத்துப்பிள்ளையார்

அடங்கன்முறைமுழுதும் பெற்றது.

திருச்சிற்றம்பலம்

பட்டணத்துப்பிள்ளையார் திருவடிவாழ்க.

சர்வஞ்ஞன்றுணையம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப்புலம்பல்.

முத்திதரும்வேதமொழிந்தபுலம்பல்சொல
அத்திமுகவன்றன்னருள்பெறுவதெக்காலம்.

ஆங்காரமுமடக்கி ஐம்புலனைச்சுட்டறுத்துத்
தூங்காமற்றூங்கிச் சுகம்பெறுவதெக்காலம். (உ)

நீங்காச்சிவயோக நித்திரைகொண்டேயிருந்து
தேங்காக்கருணைவெள்ளந் தேக்குவதுமெக்காலம். (௩)

தேங்காக்கருணைவெள்ளந் தேக்கியிருந்துண்பதற்கு
வாங்காமல்விட்டகுறை வந்தடுப்பதெக்காலம். (௪)

ஓயாக்கவலையினா லுள்ளுடைந்துவாடாமல்
மாயாப்பிறவி மயக்கறுப்பதெக்காலம். (௫)

மாயாப்பிறவி மயக்கத்தையூடறுத்துக்
காயாபுரிக்கோட்டை கைக்கொள்வதெக்காலம். (௬)

காயாபுரிக்கோட்டை கைவசமாய்க்கொள்வதற்கு
மாயாவநுபூதி வந்தடுப்பதெக்காலம். (௭)

சேயாய்ச்சமைந்து செவிடூமைபோற்றிரிந்து
பேய்போலிருந்து பிரமைகொள்வதெக்காலம். (அ)

பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்துபெண்ணைத்
தாய்போ னினைத்துத் தவமுடிப்ப தெக்காலம். (௯)

கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள்முகங் காட்டி
மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம். (௰)

பெண்ணினல்லா ராசைப்பிரமைதனை விட்டொழிந்து
கண்ணிரண்டுமூடிக் கலந்திருப்ப தெக்காலம். (௧௧)

வெட்டுண்டபுண்போல் விரிந்தவல்குற்றையதனிலே
தட்டுண்டு நிற்கை தவிர்வதுவு மெக்காலம். (௧௨)

ஆறாதபுண்ணி லழுந்திக்கிடவாமற்
றேறாதசிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம். (௧௩)

தந்தைதாய்மக்கள் சகோதரமும் பொய்யெனவே
சிந்தைதனிற்கண்டு திருக்கறுப்ப தெக்காலம். (௧௪)

மன்னுயிரைக்கொண்டு வதைத்துண்டுழலாமல்
தன்னுயிர்போலெண்ணித் தவமுடிப்ப தெக்காலம். (௧௫)

பாவியென்றே பேர்படைத்துப் பாழ்நரகில்வீழாமல்
ஆவியின் றருத்திரத்தை யறிவதினியெக்காலம். (௧௬)

உளியிட்டகல்லு முருப்பிடித்தசெஞ்சாந்தும்
புளியிட்டசெம்புபோற் பொருளாவ தெக்காலம். (௧௭)

வேடிக்கையுஞ்சொகுசு மெய்ப்பகட்டும்பொய்ப்பகட்டும்
வாடிக்கையெல்லா மறந்திருப்ப தெக்காலம். (௧௮)

பட்டுடையு மொப்பனையும் பாவனையுந் தீவினையும்
விட்டுவிட்டுன்பாதம் விரும்புவது மெக்காலம். (௧௯)

பன்றிவடி வெடுத்துப் பாரிடந்தும் மால்காணாக்
குன்றில்விளக் கொளியைக் கூறுவது மெக்காலம். (௩௧)

தித்திக்குந் தெள்ளமிர்தைச் சித்தாந்தத் துட்பொருளை
முத்திக்குவித்தை முதனிலையைப் பதெக்காலம். (௩௨)

வேதாந்தவேதமெல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே
ஏகாந்தமாக இருப்பதினி யெக்காலம். (௩௩)

மற்றிடத்தைத் தேடியென்றன் வாழ்நாளைப் போக்காமல்
உற்றிடத்தைத் தேடி யுறங்குவது மெக்காலம். (௩௪)

இன்றுளோர் நாளை யிருப்பதுவும் பொய்யெனவே
மன்றுளோர் சொல்லும் வகையறிவ தெக்காலம். (௩௫)

கஞ்சாவபினியுடன் கள்ளுண்ணல் விட்டொழித்
தஞ்சாவமிர்தம் பருகுவது மெக்காலம். (௩௬)

செஞ்சலத்திலுற்றிரண்ட சென்மமோட்சம் பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம். (௩௭)

கும்பிக் கிரைதேடிக் கொடுப்பாரிடந் தோறும்
தம்பித் திரிகை தடுப்பதினி யெக்காலம். (௩௮)

ஆடுகின்ற சூத்திரந்தா னறுமுன்னமே யறிந்து
போடுகின்ற நாள்வருமுன் போற்றுவது மெக்காலம். (௩௯)

நவசூத்திரம்போட்டு நான்நீயென்றிருந்த
சிவசூத்திரத்தைத் தெரிந்தறிவ தெக்காலம். (௪௦)

பரந்துமலசலங்கள் பாயும்புழுக்கூட்டை விட்டுப்
பரந்தனடி யிணைக்கீழ்க் கலந்திருப்ப தெக்காலம். (௪௧)

இம்மைதனிற்பாதகனு யிருவினைக்கோயெடுத்த
பொய்ம்மைதனிற்போட்டுன்னைப் போற்றியிருப்பதெக்காலம். (சஉ)

உப்பிட்டபாண்ட முடைந்துகருக்கொள்ளுமுன்னே
அப்பிட்டவேணியனைக் காப்பவதெக்காலம். (சங)

சேனைவபுரிந்து சிவரூபக்காட்சிகண்டு
பானைவதனைக்கழித்துப் பரமடைவதெக்காலம். (சச)

காண்டத்தைவாங்கிக் கருமேகமீண்டதுபோல்
பாண்டத்தைநீக்கிப் பரமடைவதெக்காலம். (சரு)

சோற்றுத்துருத்திதனைச் சுமந்தலுத்துவாடாமல்
ஊத்தைச்சடம்போட்டுனையடைவதெக்காலம். (சசு)

தொடக்கைச்சதமெனவே சுமந்தலைந்துவாடாமல்
உடக்கைக்கழற்றி யுனை யறிவதெக்காலம். (சஎ)

ஆசைவலைப்பாசத் தகப்பட்டுமாயாமல்
ஓசைமணித்தீபத்தி லொன்றியிருப்பதெக்காலம். (சஅ)

கூறரியநால்வேதங் கூப்பிட்டுங்காணாத
பாரமாம்ரகசியத்தைப் பார்த்திருப்பதெக்காலம். (சகு)

புல்லாய்விலங்காய்ப் புழுவாய்நரவடிவா
யெல்லாப்பிறப்பி னிருளகல்வதெக்காலம். (ருo)

தக்கும்வகைக்கோர்பொருளுஞ் சாராமலேவினையில்
பக்குவம்வந்துன்னருளைப் பார்த்திருப்பதெக்காலம். (ருக)

புருஷத்தலைவரோடும் புல்கியின்பங்கொள்வதற்குத்
தெரிவைப்பருவம்வந்து சிக்குவதுமெக்காலம். (ருஉ)

தெரிவையரும்பக்குவத்தின் சேராட்டேல்லாமறிந்து
குருவையறிந்தேனிவனைத் தொக் கும்பிடுவதெக்காலம். (ருரு)

வம்படிக்குமா தருடன் வாழ்ந்தாலுமன்னிபுளி
யம்பழமுமோடும்போ லாவதினியெக்காலம். (ருசு)

பற்றற்றுநீரிற் படர்ந்தவன்னம்பச்சிலைபோற்
சுற்றத்தைநீக்கிமனந் தூரநிற்பதெக்காலம். (ருரு)

சல்லாபலீலையிலே தன்மன்விசெய்தசுகம்
சொல்லாரக்கண்டெனக்குச் சொல்வதினியெக்காலம். (ருசு)

மருவுமயற்புருடன் வருநேரங்காணுமல்
உருகுமனம்போலென்னு ளுருகுவதுமெக்காலம். (ருஎ)

தன்கணவன்றன்சுகத்திற் றன்மனம்வேறுனதுபோல்
என்கருத்திலுன்பதத்தை யேற்றுவதுமெக்காலம். (ருஅ)

கூடிப்பிரிந்துவிட்ட கொம்பனையைக்காணுமற்
றேடித்தவிப்பவன்போற் சிந்தைவைப்பதெக்காலம். (ருகூ)

எவனஸ்திரீமோக மெப்படியுண்டப்படிப்போற்
கவனத்திலுன்னைக் கலந்திருப்பதெக்காலம். (சுo)

கண்ணலருவி கசிந்துமுத்துப்போலுதிரத்
தொன்னபரம்பொருளைத் தொகுத்தறிவதெக்காலம். (சுக)

ஆகமிகவுருக வன்புருகவென்புருகப்
போகவதுபூதி பொருந்துவதுமெக்காலம். (சுஉ)

நீரிற்குமிழிபோ னிசமற்றவாழ்வைவிட்டுன்
பேரிற்கருணைவெள்ளப் பெருக்கெடுப்பதெக்காலம். (சுக)

அன்னையுருக்கி யறிவைத்தன் மேற்புகட்டித்
தின்னவல்லபாசத் தொடக்கறுப்பதெக்காலம். (௯௪)

கருவின்வழியறிந்து கருத்தைச்செலுத்தாமல்
அருவிவிழிசொரிய அன்புவைப்பதெக்காலம். (௯௫)

தெளியத்தெளியத் தெளிந்தசிவானந்தத்தேன்
பொழியப்பொழியமனம் பூண்டிருப்பதெக்காலம். (௯௬)

ஆதாரமூலத் தடியிற்கணபதியைப்
பாதாரவிந்தம் பணிந்திருப்பதெக்காலம். (௯௭)

மண்வளைந்தநாற்றிக்கில் வளைந்திருந்தவேதாவைக்
கண்வளைந்துபார்த்துள்ளே கண்டிருப்பதெக்காலம். (௯௮)

அப்புப்புறநடுவே யமர்ந்திருந்தவிஷ்ணுவை
உப்புக்குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவதெக்காலம். (௯௯)

மூன்றுவளையமிட்டு முளைத்தெழுந்தவெண்ணெருப்பில்
தோன்றுமுருத்திரனைத் தொழுதிருப்பதெக்காலம். (௱)

வாயுவறுகோணமதில் வாழுமகேச்சுரனைத்
தோயும்வகைகேட்கத் தொடங்குவதுமெக்காலம். (௱௧)

வெட்டுவழிக்குள்ளே மேவுஞ்சதாசிவத்தை
இட்டவரத்தேடக் கிருபைசெய்வதெக்காலம். (௱௨)

உச்சிக்கிடைநடுவே யோங்குகுருபரத்தை
நிச்சயித்துக்கொண்டிருக்க நேர்வதினியெக்காலம். (௱௩)

பாராகிப்பார்மீதிற் பஞ்சவர்ணந்தாங்கி
வேருருகிநீமுளைத்த வித்தறிவதெக்காலம். (௱௪)

கட்டறுக்கவொண்ணாக் கருவிகரணாதியெல்லாஞ்
சுட்டறுத்து நிஷ்டையிலே தூங்குவதுமெக்காலம். (௭௫)

கள்ளக்கருத்தையெல்லாங் கட்டோடறுத்திங்
குள்ளக்கருத்தை யுணர்ந்திருப்பதெக்காலம். (௭௬)

அட்டகாசஞ்செலுத்து மவத்தைதச்சவத்துடனே
பட்டபாடத்தனையும் பகுத்தறிவதெக்காலம். (௭௭)

அறிவுக்கருவியுட னவத்தையும்பாட்டையெல்லாம்
பிறிவுபடநிறுத்திப் பெலப்படுவதெக்காலம். (௭௮)

பூதம்பொறிகரணம் போந்தவிந்தினாதமுமாய்ப்
பேதம்பலவிதமும் பிரித்தறிவதெக்காலம். (௭௯)

தோன்றாசைமூன்றுந் தொடர்ந்துவந்துசுற்றுமுன்
ஊன்றாசைவேரையடி யூடறுப்பதெக்காலம். (௮௰)

புன்சனனம்பொன்றுமுன்னே புரிவட்டம்போகவினி
யென்சனனமீடேற வென்றறிவதெக்காலம். (௮௧)

கட்டநடுவினின்று நற்றிரோதாயியருள்
இட்டவழிகாட்டிக் கிருபைசெய்வதெக்காலம். (௮௨)

நானேநானென்றறிந்தேன் நடுவினிற்கட்டழித்துத்
தானேவெளிப்படுத்திக் கருவதென்பதெக்காலம். (௮௩)

அடர்ந்தமனக்காட்டை யஞ்செழுத்தாம்வாளாலே
தொடர்ந்துதொடர்ந்துவெட்டிச் சுடுவதினியெக்காலம். (௮௪)

ஐந்துபொறிவழியோ டலைந்துதிரிந்தபாழ்மனதை
வெந்துவிழப்பார்த்து விழிப்பதினியெக்காலம். (௮௫)

இனமாண்டுசேர்ந்திருந்தோ ரெல்லாருந்தாமாண்டு
சினமாண்டுபோகவருள் சேர்ந்திருப்பதெக்காலம். (௮௬)

அமையாமனதையு மானந்தவீடுகண்டால்
இமையாமனோக்கி யிருப்பதினியெக்காலம். (௮௭)

கூண்டுவிடுஞ்சீவன்மெள்ளக் கொட்டாவிகொண்டாற்போல்
மாண்டுவிடுமுன்னநான் மாண்டிருப்பதெக்காலம். (௮௮)

ஊனிறைந்தகாய முயிரிறந்துபோகுமுன்னம்
நானிறந்துபோகவினி நாள்வருவதெக்காலம். (௮௯)

கெட்டுவிடுமாந்தர் கெறுவிதங்கள்பேசிவந்து
கட்டுவிடுமுன்னென்னைக் கட்டிருப்பதெக்காலம். (௯௦)

தோலேணிவைத்தேறித் தூரகடந்தெய்க்காமல்
நூலேணிவைத்தேறி நோக்குவதுமெக்காலம். (௯௧)

வாயோடுகண்மூடி மயக்கமுற்றுநில்லாமல்
தாயோடுகண்மூடித் தழுவிநிற்பதெக்காலம். (௯௨)

காசினியெலாநடந்து காலோய்ந்துபோகாமல்
வாசிதனிலேறி வருவதினியெக்காலம். (௯௩)

ஒலிபடருங்குண்டலியை யுன்னியுணர்வாலெழுப்பிச்
சுழிமுனையின்றாழ்திறந்து தூண்டுவதுமெக்காலம். (௯௪)

இடைபிங்கலைநடுவே யியங்குஞ்சுழிமுனையில்
தடையறவேநின்று சலிப்பறுவதெக்காலம். (௯௫)

மூலநெருப்பைவிட்டு மூட்டிநிலாமண்டபத்தில்
பாலையிறக்கி பசியொழிவதெக்காலம். (௯௬)

ஆகவெளிக்குள்ளே யடங்காப்புரவிசொல்ல
ஏகவெளியி லிருப்பதினியெக்காலம். (கூஎ)

பஞ்சரித்துப்பேசும் பலகலைக்கெட்டாப்பொருளிற்
சஞ்சரித்துவாழுந் தவம்பெறுவதெக்காலம். (கூஅ)

மலமுஞ்சலமுமற்று மாயையற்றுமானமற்று
கலமுங்குலமுமற்று நானிருப்பதெக்காலம். (கூகூ)

ஓடாமலோடியுலகைவலம்சுற்றித்
தேடாமலென்னிடமாய்த் தெரிசிப்பதெக்காலம். (ள)

அஞ்ஞானம்விட்டே யருண்ஞானத்தொல்லைதொட்டு
மெஞ்ஞானவீடுபெற்று வெளிப்படுவதெக்காலம். (கoக)

வெல்லுமட்டும்பார்த்து வெகுளியெல்லாம்விட்டகன்று
செல்லுமட்டுஞ்சிந்தைசெலுத்துவதுமெக்காலம். (கoஉ)

மேலாம்பதந்தேடி மெய்ப்பொருளையுள்ளிருத்தி
சாலரம்பதந்தேடி நான்பெறுவதெக்காலம். (கoங)

எண்ணாதுரமெல்லா மெண்ணியெண்ணிப்பாராமற்
கண்ணாடிக்குள்ளொளிபோற் கண்டறிவதெக்காலம். (கoச)

என்னையறிந்துகொண்டே யெங்கோமானோடிருக்குந்
தன்மையறிந்து சமைந்திருப்பதெக்காலம். (கoரு)

ஆறாதாரங்கடந்த வானந்தப்பேரொளியைப்
பேறாகக்கண்டோன் பெற்றிருப்பதெக்காலம். (கoசா)

ஆணவமாயத்தா லழிந்துசலம்போகாமுன்
காணிதலாவின்பமற்றுக் கண்டறிவதெக்காலம். (கoஎ)

மும்மலமுஞ்சேர்ந்து முளைத்தெழுந்த காயமதை
நிர்மலமாய்க்கண்டுவினை நீக்கியிருப்பதெக்காலம் ([illegible])

முன்னைவினை கெட்டுவிட மூன்றுவகை காட்டியிலே
உன்னைவெளிப்படுத்தி யுருவழிவதெக்காலம் ([illegible])

கண்ணி னொளிபாய்ந்ததுவுங் கருத்தறிந்து கொண்டதுவும்
விண்ணிலொளிகண்டதுவும் வெளிப்படுவதெக்காலம் ([illegible])

கனவுகண்டாற்போ லெனக்குக் காட்டி மறைந்தேயிருந்த
நினைவைப்பரவெளிமேல் நிறுத்துவதெக்காலம் ([illegible])

ஆரென்றுகேட்டதுவு மறிவுவந்து கண்டதுவும்
பாரொன்றுசொன்னதுவும் பகுத்தறிவதெக்காலம் ([illegible])

நினைக்குநினைவுதோறும் நிறைந்தபரிபூரணத்தை
முனைக்குமேற்கண்டுகண்ணில் முத்துதிர்ப்பதெக்காலம் ([illegible])

முப்பாழும்பாழாய் முதற்பாழுஞ்சூனியமாய்
அப்பாழும்பாழா யன்புசெய்வதெக்காலம் ([illegible])

சீரொன்றெழுந்து தெளிந்துநின்றவான்பொருளை
நீரொன்றுகண்டு நிலைபெறுவதெக்காலம் ([illegible])

அவ்வெழுத்தும் உவ்வெழுத்து மகாரமுஞ் சிவ்வெழுத்தும்
இவ்வெழுத்தினுள்ளே யடங்கியிருப்பதெக்காலம் ([illegible])

எழுத்தெல்லாமாண்டிறந்தே யேகமாநின்றதிலே
அழுத்தமாய்ச்சிந்தையுறவைத் தன்புகொள்வதெக்காலம் ([illegible])

அருவாகியுருவாகி யாதியந்தமாகிநின்ற
குருவாகிவந்தென்னையாட் கொண்டருள்வதெக்காலம் ([illegible])

நானென் றறிந்தவனை நானறியாக் காலமெல்லாந்
தானென் றிருந்த தனையறிவ தெக்காலம். (கக௯)

என்மயமாக் கண்டதெல்லா மின்னியென்னைப் பார்த்தயின்பு
தன்மயமாக் கொண்டதிலே சார்ந்திருப்ப தெக்காலம். (கஉ௦)

ஒளியி லொளியா யுருப்பிறந்த வாறதுபோல்
வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம். (கஉக)

ஒளியிட்ட மெய்ப்பொருளை யுள்வழியிலே யடைத்து
வெளியிட்டுச் சாத்திவைத்து வீடறிவ தெக்காலம். (கஉஉ)

காந்தம் வலித்திரும்பைக் கரத்திழுத்துக் கொண்டதுபோற்
பாய்ந்து பிடித்திழுத்துன் பக்கல்வைப்ப தெக்காலம். (கஉ௩)

பித்தாயங் கொண்டு பிராணவத்தை யுற்றுச்
செத்தாரைப் போலே திரிவதினி யெக்காலம். (கஉச)

ஒழிந்த கருணைவைத் துள்ளும் புறம்புமாய்க்
கழிந்த பிணம்போ லிருக்கக் காண்பதினி யெக்காலம். (கஉ௫)

ஆதிகபிலர் சொன்ன வாகமத்தின் சொற்படியே
சாதிவகை யில்லாமற் சஞ்சரிப்ப தெக்காலம். (கஉசு)

சூதுங் களவுந் தொடராவினையுங் கட்டிடக்கற்
றூதுந் துருத்தியைப்போற் றேனயடைவ தெக்காலம். (கஉஎ)

ஆசைவலைப் பாசத் தகப்பட்டு மாயாமல்
ஓசைமணி தீபத்தி லொன்றிநிற்ப தெக்காலம். (கஉஅ)

கல்லாய் மரமாய்க் காடாய்ப் பறவைகளாய்ப்
புல்லாய்ப் பிறந்தசென்மம் போதுமென்ப தெக்காலம். (கஉ௯)

தக்கும்வகைக்கோர் பொருளுஞ் சாராமலேதனிலே
பக்குவம்வந்தின்னருளைப் பார்த்திருப்ப தெக்காலம். (கரு0)

தூரோட்டைச் சுத்திக் கீழ்மூன்றுநின்ற தத்துவத்தை
வேரோட்டறுத்து விளங்குவது மெக்காலம். (கருக)

பாகமொழிப் பயன்தெளிந்த தின்னைதனை
ஆகமமூலத் தழுத்துவது மெக்காலம். (கருஉ)

ஓரின்பங் கட்டு முயர்ஞானவீதிசென்று
பேரின்பவீடுகண்டு பெற்றிருப்ப தெக்காலம், (கருங)

காரணமாய்வந்த தன் கருத்தினுறைந்த தெல்லாம்
பூரணமாக்கண்டு புகழ்ந்திருப்ப தெக்காலம். (கருச)

ஆயுங் கலைகளெல்லா மாராய்ந்து பார்த்ததற்பின்
நீயொன்றுமில்லா நிசங்காண்ப தெக்காலம். (கருரு)

குறியாகக்கொண்டு குலமளித்தனாயதனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்ப தெக்காலம். (கருசா)

மத்தடுத்து நின்று மருளிடுவோர் பேரிலே
பித்தடுத்து நின்னருளைப் பெற்றிருப்ப தெக்காலம். (கருஎ)

சாவாமற் செத்திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேவாமல் வெந்திருக்க வேண்டுவது மெக்காலம். (கருஅ)

என்னையறியாம லிருந்தாட்டுஞ் சூத்திரியின்
தன்னையறிந்து தவம்பெறுவ தெக்காலம். (கருகூ)

உள்ளறியாம லொளித்திருந்த நாயகனைக்
கள்ளமனந் தெளிந்து காண்ப தினியெக்காலம். (கசா0)

வாசித்துங்காணும்ல் வாய்விட்டும்பேசாமல்
பூசித்துந்தோன்றாப் பொருள்காண்பதெக்காலம். (கசக)

பன்னிரண்டுகாற்புரவி பாய்ந்துசெலநடத்தாமற்
பின்னிரண்டுசெங்கிலிக்குப் பிணைப்பதினியெக்காலம். (கசஉ)

நாட்டுக்காலிரண்டும்விட்டு நடுவுக்காலூடேபோய்
ஆட்டுக்காற்கண்டெனுள்ளே யமர்ந்திருப்பதெக்காலம். (கசங)

பாற்பசுவையூட்டி பதியில்வந்துசீராட்டி
காற்பசுவையோட்டியதிற் கட்டிவைப்பதெக்காலம். (கசச)

புலவிடத்தேமனதைப் பாயவிட்டுப்பாராமல்
நிலவரையினூடேபோய் நேர்படுவதெக்காலம். (கசரு)

காமக்கடல்கடந்து கரையேறிபோவதற்கே.
ஓமக்கனல்வளர்த்தி யுள்ளிருப்பதெக்காலம். (கசசா)

உதயச்சுடர்மூன்று முள்வீட்டிலேகொளுத்தி.
இதயத்திருநடன மினிக்காண்பதெக்காலம். (கசஎ)

பொன்னிற்பலவிதமாம் பூஷணமுண்டானதுபோல்
உன்னிற்பிறந்துன்னி லொடுக்குவதுமெக்காலம். (கசஅ)

நாயிற்கடைப்பிறப்பாய் நான்பிறந்ததுன்புமற.
வேயிற்கனலொளிபோல்விளங்குவதுமெக்காலம். (கசகூ)

சூரியகாந்தவொளி சூழ்ந்துபஞ்சைச்சுட்டாற்போ.
லாரியன்றோற்றத் தருள்பெறுவதெக்காலம். (கருo)

இரும்பிற்கனன்மூட்டி யிவ்வுருப்போயவ்வுருவாய்க்
கரும்பிற்சுவைரசத்தைக் கண்டறிவதெக்காலம். (கருக)

கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தானினைக்க
உருக்கொண்டவாறதுபோ லுனையடைவ தெக்காலம். (கருஉ)

வீடுவிட்டுப்பாய்ந்து வெளியில்வருவார்போல்
கூடுவிட்டுப்பாயுங் குறிப்பறிவ தெக்காலம். (கருங)

கடைந்தவெண்ணெய்மோரிற் கலவாதவா றதுபோ
லுடைந்து தமியே னுனைக்காண்ப தெக்காலம். (கருச)

இருளையொளிவிழுங்கி யேகவுருக்கொண்டாற்போ
லருளைவிழுங்குமிரு ளகன்றுநிற்ப தெக்காலம். (கருரு)

மின்னெழும்மின்னொடுங்கி விண்ணிலுறைந்தாற்போ
லெண்ணிநின்ற தென்னுள்ளே யானறிவ தெக்காலம். (கருசு)

கண்டபுனற்கடத்திற் கதிரொளிகள்பாய்ந்தாற்போல்
கொண்டசொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம். (கருஎ)

பூணுகின்றபொன்னணிந்தாற் பொன்சுமக்குமோவுடலை
காணுகின்றவெனகத்திற் கண்டறிவ தெக்காலம். (கருஅ)

செம்பிற்களிம்புபோற் சிவத்தைவிழுங்கிமிக
வெம்புகின்றசெல்வத்தை வேறுசெய்வ தெக்காலம். (கருகூ)

ஆவியுங்காயமும்போ லாத்துமத்தினின்றதனைப்
பாவியறிந்துமனம் பற்றிநிற்ப தெக்காலம். (கசுO)

உண்மைகளுக்கண்டுரைக்க வறியாதவின்பமதை
நாமறிந்துகொள்வதற்கு நாள்வருவ தெக்காலம். (கசுக)

சாகாச்சிவனடியைத் தப்பாதாரெப்போதும்
போகாவுடலகன்று போவரென்ப தெக்காலம். (கசுஉ)

நிட்டைதனைவிட்டு நினைவறிவுதப்பவிட்டு
வெட்டவெளியில் விரவிநிற்பதெக்காலம். (௧௬௩)

வெட்டவெளி தன்னில் விளைந்தவெறும்பாழை
கிட்டமுடன்கண்டு தெளிவதினியெக்காலம். (௧௬௪)

எங்கும்பரவடிவா மென்வடிவுநின்வடிவு
கங்குல்பகலின்றியுனைக் கண்டறிவதெக்காலம். (௧௬௫)

உண்டதுவுமாத ருடன்கூடியச்சேர்ந்தின்பங்
கண்டதுநீயெனவே கண்டுகொள்வதெக்காலம். (௧௬௬)

ஈதென்றுகேட்டதுவு மென்னுள்ளேநின்றதுவு
மோமென்றுசொன்னதுவு முற்றறிவதெக்காலம். (௧௬௭)

சத்தம்பிறந்திடமுந் தன்மயமாய்நின்றிடமுஞ்
சித்தம்பிறந்திடமும் தேர்ந்தறிவதெக்காலம். (௧௬௮)

போக்கும்வரவும் புறம்புமுள்ளுமாகிநின்று
தாக்கும்பொருளைச் சந்திப்பதெக்காலம். (௧௬௯)

நானெனவு நீயெனவு நாமிரண்டுமற்றொன்றாய்
நீயென்னவேநின்று நிலைபெறுவதெக்காலம். (௧௭௰)

அறிவையறிவாலறிந்தே யறியுமறிவுதனில்
பிறிவுபடவில்லாமல் பிடிப்பதினியெக்காலம். (௧௭௧)

நீடும்புவனமெல்லாம் நிறைந்துநின்றசித்திரமாய்
ஆடுந்திருக்கூத்தை யறிவதினியெக்காலம். (௧௭௨)

தித்தியென்றகூத்துந் திருச்சிலம்பினோசைகளும்
பத்தியுடன்கேட்டுப் பணிவதினியெக்காலம். (௧௭௩)

நயனத்திடைவெளிபோய் நண்ணும்பரவெளியில்
சயனித்திருந்து தலைப்படுவதெக்காலம். (கஎ௪)

அருவிமலைநடுவே யாயிரங்கால்மண்டபத்தில்
திருவிளையாடற்கண்டு தெரிசிப்பதெக்காலம். (கஎரு)

மீனிரம்பவுண்டுகக்கி விக்கிநின்றகொக்கதுபோ
றேனிறம்பவுண்டு தெவிட்டிநிற்பதெக்காலம். (கஎசு)

எண்ணூறுதவமிருந்து மெய்தாதவீடுபெற
வெண்ணீறுபூசி விளங்குவதுமெக்காலம். (கஎஎ)

பொல்லாதகாயமுனைப் போட்டுவிட்டுபோகுமுனே
கல்லாவின்பால்கறப்பக் கற்பதினியெக்காலம். (கஎஅ)

வெட்டவெளிக்குள்ளே விளங்குஞ்சதாசிவத்தைக்
கிட்டவரத்தேடக் கிருபைசெய்வதெக்காலம். (கஎகூ)

பேரறிவிலேமனதைப் போராமலேயிருத்தி
ஓரறிவிலென்னாளு மூன்றிநிற்பதெக்காலம். (கஅ0)

அத்துவிதம்போலுமென்ற னுத்தமத்தினுள்ளிருந்து
முத்திதாநின்ற முறையறிவதெக்காலம். (கஅக)

நானின்றபாசமதி ஞனிருந்திமாளாமல்
நீநின்றகோலமதி னிரவிநிற்பதெக்காலம். (கஅஉ)

எள்ளுங்கரும்பு மெழின்மலருங்காயும்போல்
உள்ளும்புறம்புநின்ற துற்றறிவதெக்காலம். (கஅங)

அன்னம்புலனைவருத் தமிர்தத்தையுண்டதுபோ
லென்னைவருத்துன்னை யினிக்காண்பதெக்காலம். (கஅச)

அந்தரத்தினிற்பூத் தலர்ந்தெழுந்ததாமரைமேல்
இந்தத்தலைவைத்துக்கண்டு தெரிசிப்பதெக்காலம். (௧௦௫)

பிறப்புமிறப்புமற்றுப் பேச்சுமற்றுமூச்சுமற்று
மறப்புநினைப்புமற்று மாண்டிருப்பதெக்காலம். (௧௦௬)

என்வசமுங்கெட்டிங் கிருந்தவசமுமழிந்து
தன்வசமுங்கெட்டருளைச் சார்ந்திருப்பதெக்காலம். (௧௦௭)

தன்னைமறந்து தலத்துநிலைமறந்து
கன்மமுமறந்து கதிபெறுவதெக்காலம். (௧௦௮)

என்னையென்னிலேமறந்தே யிருந்தபதியுமறந்து
தன்னையுந்தானேமறந்து தனித்திருப்பதெக்காலம். (௧௦௯)

தன்னையுந்தானேமறந்து தலைவாசற்றாழ்போட்டு
உன்னைநினைத்துள்ளே யுறங்குவதுமெக்காலம். (௧௧௦)

தொடக்கைச்சதமெனவே சுமந்தலைந்துவாடாமல்
உடக்கைகழற்றி யுனையடைவதெக்காலம். (௧௧௧)

மன்னும்பரவெளியை மனவெளியிலடைத்தே
என்னுமொருநினைவை யெழுப்பியிருப்பதெக்காலம். (௧௧௨)

எவனத்தின்மோக மெப்படியுண்டப்படியோ
சிவனத்தியானக் கருத்துள்வைப்பதெக்காலம். (௧௧௩)

ஆசைகொண்டமாத ரடைகனவுநீக்கியுன்மேல்
ஓசைகொண்டுநானு மொடுங்குவதுமெக்காலம். (௧௧௪)

தன்னுயிரைக்கொண்டு தான்றிரிந்தவாறதுபோல்
உன்னுயிரைக்கொண்டிங் கொடுங்குவதுமெக்காலம். (௧௧௫)

கடலர்ந்தபங்கயமு மிருகிணைநேத்திரமுந்
தோட்டணிந்தகுண்டலமுந் தோன்றுவதுமெக்காலம். (உ0எ)

ஐயாறுமாறு மகன்றுவெறும்வெளியில்
மையாளில்நின்றமன மான்வதினியெக்காலம். (உ0அ)

காட்டுமெருண்ஞானக் கடலிலன்புகப்புலிவிட்டு
மூட்டுகருணைக்கடலில் மூழ்குவதுமெக்காலம். (உ0கூ)

நானோநீயாரோ நற்றூபமான
தானோவென்றுணர்ந்து தவமுடிப்பதெக்காலம். (உக0)

எவரெவர்களெப்படிக்கண் டெந்தப்படி நினைந்தார்
அவரவருக்கப்படிநின் றாமென்பதெக்காலம். (உகக)

உற்றுற்றுப்பார்க்க வொளிதருமானந்தமென்
நெற்றிக்குநேர்கண்டு நிலைப்பதினியெக்காலம். (உகஉ)

விளங்குகின்றதாரகையை வேய்யோன்மறைத்தாற்போல்
களங்காறவுன்காட்சி கண்டறிவதெக்காலம். (உகஙூ)

என்னையேனறியே னிந்தவண்ணஞ்சொன்னதெல்லாம்
முன்னையோர்நகைகொள்ள முன்பணிவதெக்காலம். (உகச)

அஞ்சுகரத்தா னடியிணையைப்போற்றிசெய்து
நெஞ்சுபொருந்தி நிலைபெறுவதெக்காலம். (உகரு)

பத்திரகிரியார்மெய்ஞ்ஞானப்புலம்பல்.

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

பத்திரகிரியார் திருவடி வாழ்க.

சர்வஞ்சின்மயம்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# சிவவாக்கியம்.

அகாரகாரணத்துளே யநேகநேகரூபமாய்
உகாரகாரணத்துளே யுருத்தரித்துநின்றனன்
மகாரகாரணத்துளே மயங்குகின்றவையகஞ்
சிகாரகாரணத்துளே தெளிந்ததேசிவாயமே. (க)

அரியதோர்நமசிவாய மாதியந்தமானதும்
ஆறிரண்டுநூறுகோடி யுள்ளவிட்டமந்திரம்
தெரியநாலுவேதமாறு சாஸ்திரம்புராணமுந்
தேடுமாலுமயனுஞ்சர்வ தேவதேவதேவனே. (உ)

நமசிவாயவஞ்செழுத்து நிற்குநன்னிலைகளும்
நமசிவாயவஞ்சிலேடு கூடுமெவ்வெழுத்தையும்
நமசிவாயவஞ்சுபூத நாதமானவாறையும்
நமசிவாயவுண்மையை நமக்குநாதசெய்நாதனே. (ங)

நவ்விரண்டுகாலதாய் நவின்றமவ்வுவயிறதாய்ச்
சிவ்விரண்டுதோளதாய்ச் சிறந்தவவ்வுவாயதா
யவ்விரண்டுகண்ணதா யமர்ந்திருந்தகாரணஞ்
செவ்வியொத்துநின்றதே சிவாயவஞ்செழுத்துமே. (ச)

சிவாயவஞ்செழுத்திலே தெளிந்துமுத்திசேரலாம்
சிவாயவஞ்செழுத்திலே தெளிந்துவானமாளலாம்
சிவாயவஞ்செழுத்திலே தெளிந்துஞானம்சேரலாம்
சிவாயவஞ்செழுத்தையுந் தெளிந்துபாருமும்முளே. (ரு)

பரமுனக்கெனக்குவேறு பயமுமில்லைபாரையா
கரமுனக்குவித்தமுங் குவித்திடக்கடவைய
சிரமுருக்கியமுதளித்த சீருலாவுநாதனே
யுரமெனக்குநீயளித்த வுண்மையுண்மையுண்மையே. (௬)

அஞ்சுமூன்றுமெட்டதா யநாதியானமந்திரம்
நெஞ்சிலேநினைந்துகொண்டு நூறுநூறுசெபிப்பிரேற்
பஞ்சமானபாதகங்க ணூறுகோடிசெய்யினும்
பஞ்சுபோற்பறக்குமென்று நான்மறைகள்பன்னுமே. (௭)

சிவாயவென்றவட்சரஞ் சிவனிருக்குமட்சரம்
உபாயமென்றுநம்புவோர்க் குண்மையானவட்சரம்
கபாடமிட்டவாசலைக் கடந்துபோகும்வாயுவை
யுபாயமிட்டழைக்குமே சிவாயமஞ்செழுத்துமே. (௮)

நல்லமஞ்சனங்கள்தேடி நாடியோடிமாய்கிறீர்
நல்லமஞ்சனங்களுண்டு நாட்டமாகவும்முளே
யெல்லைகண்டெடுத்துநீவி ரேகபூசைசெய்விரேற்
றில்லைமேவுசீவனுஞ் சிவன்பதத்திலாகுமே. (௯)

அறிவிலேபிறந்திருந்த மாகமங்களோதுவீர்
* நெறியிலேநீரிருக்கு நேர்மையென்னநேர்மைதா
னுறியிலேதயிரிருக்க வூர்புகுந்துவெண்ணெய்தே
டறிவிலாமாந்தரோடு மணுகிவாழ்வதெங்ஙனே. (௰)

இருக்குநாலுவேதமு மெழுத்தறவேயோதினும்
பெருக்கநீறுபூசினும் பிதற்றினும்பிரானிரா
னுருக்கிநெஞ்சையுட்கலந்த வுண்மைகூடவல்லிரேற்
சுருக்கமற்றசோதியைத் தொடர்ந்துகூடலாகுமே. (௧௧)

---

* நெறியதனில்நீரிருக்க என்றும்பாடம்.

மூலவட்டமீதிலே முளைத்தவைந்தெழுத்திலே
கோலவட்டமூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்றதீ
ஞாலவட்டமன்றுளே நவின்றஞானிமேலதா
யேலவட்டமாகியே யிருந்ததேசிவாயமே. (கஉ)

அம்பலத்தையம்புகொண்டு சங்கென்றாலசங்குமோ
கம்பமற்றபாற்கடல் கலங்கென்றாற்கலங்குமோ
வின்பமற்றயோகியை யிருளும்வந்தணுகுமோ
செம்பொனம்பலத்திலே தெளிந்ததேசிவாயமே. (கங)

காணமுற்றகாட்டகத்தில் வெந்தெழுந்தநீறுபோல்
ஞானமுற்ற நெஞ்சகத்தி னல்லதொன்றுமில்லையே
யூனமற்றசோதியோ டுணர்வுகொண்டடங்கினாற்
றேனகத்தினூறல்போற் றெளிந்ததேசிவாயமே. (கச)

மனத்தகத்தழுக்கறாத மௌனயோகஞானிகள்
வனத்தகத்திருக்கினு மனத்தகத்தழுக்கறார்
மனத்தகத்தழுக்கறுத்த மௌனயோகஞானிகள்
முலைத்தடத்திருக்கினும் பிறப்பறுத்திருப்பரே. (கரு)

பேசுவானுமீசனே பிரமஞானமும்முளே
யாசையானவைவரு மலைந்தலைச்சற்பண்ணுறா
ராசையானவைவரை யடக்கிவோரிடத்திலே
பேசிடாதிருப்பராகி லீசன்வந்துபேசுமே. (கசு)

சாமநாலுவேதமுஞ் சகலசாஸ்திரங்களுஞ்
சேமநாலையோதினுஞ் சிவனைநீரறிந்திலீர்
காமநோயைவிட்டுநீர் கருத்தொடுங்கவல்லிரே
லூனமற்றகாயமா யிருப்பனெங்களீசனே. (கஎ)

வரவுகண்டுகொண்டபெண்ணை மற்றொருவர்நத்தினால்
விடுவனோன்பராருயிரை வெட்டவேண்டுமென்பரே
நடுவன்வந்தழைத்தபோது நாறுமிந்தநல்லுடல்
சுடலைமட்டுங்கொண்டுபோய்த் தோட்டிகைக்கொடுப்பரே. (கஅ)

இரண்டதொன்றுமூலமா யியங்குசக்கரத்துளே
சுருண்டுமூலவளையமாய்ச் சுணங்குபோற்கிடந்ததில்
முரண்டெழுந்தசங்கினோசை மூலநாடியூடுபோ
யரங்கபட்டணத்துளே யமர்ந்ததேசிவாயமே. (க௯)

வித்திலாதசம்பிரதாய மேலுமில்லைகீழுமில்லை
தைத்திலாதமாளிகை சமைந்தவாறதெங்ஙனே
பெற்றதாயைவிற்றடிமை கொள்ளுகின்றபேதைகாள்
சித்திலாதபோதுதான் சீவனில்லையில்லையே. (உ0)

ஆடுகாட்டிவேங்கையை யகப்படுத்துமாறுபோல்
மாடுகாட்டியென்னைநீ மதிமயக்கலாகுமோ
கோடுகாட்டியானையைக் கொன்றுரித்தகொற்றவா
வீடுகாட்டியென்னைநீ வெளிப்படுத்தவேண்டுமே. (உக)

உருத்தரித்தநாடிதன்னி லோடுகின்றவாயுவை
கருத்தினாலிருத்தியே கபாலமேற்றவல்லிரேல்
விருத்தர்களும்பாலராவர் மேனியுஞ்சிவந்திடும்
அருட்டரித்தநாதனாணை யம்மையாணையுண்மையே. (உ௨)

என்னகத்திலென்னைநா னெங்குமோர்ந்துநாடினேன்
என்னகத்திலென்னையன்றி யேதுமொன்றுங்கண்டிலேன்
மின்னெழும்பிவிண்ணகத்தின் மின்னொடுங்குமாறுபோ
லென்னகத்துளீசனோடி யானுமல்லதில்லையே. (உ௩)

நாலுவேதமோதுகின்றஞானமொன்றறிவீரோ
நாலுசாமமாகியேநவின்றஞானம் போதமாய்
ஆலமுண்டகண்டனு மயனுமந்தமாலுமாய்ச்
சாலவுன்னிநெஞ்சுளே தரித்ததேசிவாயமே. (௨௪)

மூச்சதுரமூலமாகி மூன்றதான்பேதமா
யச்சதுரமும்முளே யடங்கவாசியோகமாய்
மெய்ச்சதுரமெய்யுளே விளங்குஞானதீபமா
யுச்சரித்தமந்திரம் ஓம்நமசிவாயமே. (௨௫)

மூலமண்டலத்துளே முச்சதுரமாகியாய்
நாலுவாசலெண்விரலி னடுவுதித்தமந்திரங்
கோலியொன்றுமைந்துமாய்க் குளிர்ந்தலர்ந்துநின்றதை
மேலுவேறுநாடிலேன் விளைந்ததேசிவாயமே. (௨௬)

மூன்றுமண்டலத்துளே முட்டினின்றதூணிலே
நான்றபாம்பின்வாயிலே நடுவுநின்றதீபமா
யீன்றதாயுமப்பனு மெடுத்துரைத்தமந்திரந்
தோன்றுமோரெழுத்திலே செல்லவெங்குமில்லையே. (௨௭)

ஐம்பதொன்றிலக்கர மடங்குமோரெழுத்துளே
விண்பரந்தமந்த்ரமும் வேதநான்குமொன்றலோ
ஒண்புறந்தமூலவைந் தெழுத்துளேமுளைத்ததீ
யங்கலிங்கபீடமா யமர்ந்ததேசிவாயமே. (௨௮)

வஞ்சகப்பிறப்பினை மனத்துளேதரித்துநீ
ரஞ்செழுத்திலுண்மையை யறிகிலாதமாந்தரே
வஞ்சனைப்பிறப்பினை வதைத்திடவும்வல்லீரே
லஞ்செழுத்திலுண்மையை யறிந்துகொள்ளலாகுமே. (௨௯)

இடங்கள்பண்ணிச்சுத்திசெய்து யிட்டபீடமீதிலே
யடங்கநீறுபூசியே யருந்தவங்கள்பண்ணுவீர்
ஒடுங்குகின்றநாதனை யுதிக்குஞானமெவ்விட
மடங்குகின்றதெவ்விட மறிந்துபூசைசெய்யுமே. (௯௦)

அட்சரமநாதியோ வாத்துமமநாதியோ
தத்துவமநாதியோ சதாசிவமநாதியோ
தக்கமிக்கநூல்களுஞ் சாஸ்திரமநாதியோ
மிக்கிருந்தஞானிகள் விரித்துரைத்தல்வேண்டுமே. (௯௧)

அக்கரமநாதியல்ல வாத்தும்மநாதியல்ல
புக்கிருந்தபூதமும் புலன்களுமநாதியல்ல
தக்கமிக்கநூல்களுஞ் சாஸ்திரமநாதியல்ல
ஒக்கநின்றுடற்கலந்த வுண்மைகாணநாதியே. (௯௨)

புத்தகங்களைச்சுமந்து பொய்களைப்பிதற்றுவீர்
செத்திடம்பிறந்திடம தெங்கனென்றறிகிலீர்
அத்தனையசித்தனை யறிந்துநோக்கவல்லீரே
லுத்தமத்துளாயசோதி யுணரும்யோகமாகுமே. (௯௩)

நாலுவேதமோதுவீர் ஞானமொன்றுசொல்லுவீர்
பாலினுள்நெய்கலந்த பான்மையையறிவீரோ
வாலமுண்டகண்டனு மகத்துளேயிருக்கையிற்
காலனென்றுசொல்லுவீர் கனவினுமங்கில்லையே. (௯௪)

சாதியாவதேதடா சலந்திரண்டநீரலோ
போதுவாசமென்றலோ பூதமைந்துமொன்றலோ
ஓதும்வேதகீதமு மூணுறக்கமொன்றலோ
சாதியாவதென்பதேது சாவுவாழ்வுதிண்ணமே. (௯௫)

அருளிலேபிறந்திருந்து மானரூபமாகியே
விருளிலேதயங்குகின்ற வேழைமாந்தர்கேண்மினோ
பொருளிலேதவம்புனைந்து பொருந்திநோக்கவல்லிரேல்
மருளதேதுவன்னியின் மறைந்ததேசிவாயமே. (௩௬)

கருக்கலந்தகாலமே கண்டிருந்தகாரணா
வுருக்கலந்தபோதலோ வுன்னையானறிந்தனன்
திருக்கலந்தசோதியைத் தெளிந்துயானறிந்தபின்
னிருக்கிலேனிறக்கிலே னிரண்டுமற்றிருந்ததே. (௩௭)

மௌனமானவஞ்செழுத்தை வாசியேறிமெல்லவே
வானெலாநிறைந்தசோதி மண்டலம்புகுந்தபின்
அவனுநானுமெய்கலந்தே யனுபவிக்குமளவிலே
யவனுமுண்டுநானுமில்லை யாருமில்லையானதே. (௩௮)

கைவிடங்கள்கொண்டுநீர் கண்சிமிட்டிநிற்கிறீர்
செய்விடங்கள்கொண்டுநீ ரென்றுமேசெபிக்கிறீர்
பொய்யடங்கவையரைப் பொருந்திநோக்கவல்லிரேல்
மெய்யமர்ந்தகண்டனோடும் மருவிவாழலாகுமே. (௩௯)

பருத்திநூன்முருக்கியிட்டுப் பஞ்சையோதுவஞ்சர்காள்
திருத்திநூன்முறுக்கியிட்டுத் தாண்டியேறவல்லிரேற்
கருத்தினூலையுங்கழன்று காலனூலையும்மகன்
றொருத்திநூல்தலைப்படுமி துண்மையுண்மையுண்மையே. (௪௦)

தன்மசிந்தையாமளவுந் தவமறியாத்தன்மையாய்க்
கன்மசிந்தைவெயிலுழன்று கருத்தழிந்தகசடரே
ஜென்மஜென்மந்தேடியுந் தெளியொணாதசெல்வனை
நன்மையாகவும்முளே நயந்துகாணவேண்டுமே. (௪௧)

வானிலாததொன்றுமில்லை வானுமில்லையென்றிடில்
ஊனிலாததொன்றுமில்லை யூனுமில்லையுன்னிடில்
நானிலாததொன்றுமில்லை நானுமில்லைநண்ணிடில்
தானிலாததொன்றுமில்லை தயங்கியாடுகின்றதே (௩௨)

கள்ளமுள்ளமேயிருக்கக் கடந்தஞானமோதுவீர்
கள்ளமுள்ளறுத்தபோது கதியிதன்றிக்காண்கிலீர்
உள்ளமேவிளக்கிநித் தொளியணுகவல்லிரேற்
றெள்ளுஞானமும்முளே சிறந்ததேசிவாயமே (௩௩)

காணவேண்டுமென்றுநீர் கடன்மலைகளேறுவீர்
ஆணவமதல்லவோ வறிவிலாதமாந்தரே
வேணுமென்றவீசர்பாத மெய்யுளேதரிப்பிரேற்
றாணுவாகநின்றசீவன் றான்சிவமதாகுமே (௩௪)

அணுவினோடகண்டமா யளவிடாதசோதியைக்
குணமதாகவும்முளே குறித்துநோக்கின்முத்தியாம்
மிணமுணென்றுவிரலையெண்ணி மீணுமுணுக்கமாய்த்
திணிவிலாதபடியினாற் றெரிபார்ந்துபூசைசெய்குவீர் (௩௫)

எச்சிலெச்சிலென்று நீரிடர்ந்திருக்குமேழைகாள்
துச்சிலெச்சிலல்லவோ தூயகாயமானதும்
வைத்தவெச்சிறேனலோ வண்டினெச்சில்பூவலோ
கைச்சதாவில்வைத்துடன் கறந்தபாலுமெச்சிலே (௩௬)

தீர்த்தலிங்கமூர்த்தியென்று தேடியோடுந்தீனரே
தீர்த்தலிங்கமுள்ளிநின்ற சிவனைத்தெளிவிரோ
தீர்த்தலிங்கமும்முளே தெளிந்துகாணவல்லிரேற்
தீர்த்தலிங்கந்தானதாய்ச் சிறந்ததேசிவாயமே (௩௭)

ஆடுகொண்டுகூடுசெய் தமர்ந்திருக்கும்வாறுபோற்
றேடுகின்றசெம்பினைத் திட்டப்பட்டப்பாப்பியே
நாடுகின்றதம்பிரானு நம்முளேயிருக்கவே
யோடுபத்ரபூசையென்ன பூசையென்னபூசையே. (௪௮)

அன்னைகர்ப்பகோளரைக்கு ளக்கினிப்பிரகாசமா
வவ்வரைக்குள்வெந்திடா வற்பவிந்துரூபமாய்
தன்னையொக்குமென்றபோது தடையறுத்துவெளியதாய்த்
தகுதிநல்லபெருமைதந்து தலைவிளக்வளர்த்தநீ. (௪௯)

என்னையற்பநேரமு மறக்கிலாதநாதனே
யேகனேயிறைவனே யிராசராசராசனே
யுன்னையற்பநேரமு மொழிந்திருக்கலாகுமோ
வுந்துநாட்டமெனதுநாவி லுதவிசெய்விரீசனே. (௫௦)

எல்லையற்றுநின்றசோதி யேகமாயெறிக்கவே
எந்தைபூரணப்பிரகாச ரேகபோகமாகியே
நல்லவின்பமௌனசா கரத்திலேயழுத்தியே
நாடொணாதவமிர்தமூண்டு நானழிந்துநின்றநாள். (௫௧)

அல்லிறந்துபகலிறந் ததீதமுமிறந்துபோ
யண்டரண்டமுங்கடந் தநேகநேகரூபமாய்ச்
சொல்லிறந்துபொருளிறந்த சுகசொரூபவெளியிலே
சொல்லியாரவெண்ணில்வேறு துணைகளானவில்லையே. (௫௨)

ஆனவாறதாயிடு மகண்டமானசோதியை
யூனைநாட்டியும்முளேயுகந்துகாணவல்லிரே
ஊனகாயமானவா மூலபாரமானவரும்
வானநாடமோனலாம் வானநாடராணையே. (௫௩)

இட்டகுண்டமேதடா வெரிவளர்ப்ப*தேதடா
சுட்டமண்கலத்திலே சுற்றுநூல்களேதடா
முட்டிநின்றதூணிலே மூண்டெழுந்தசோதியைப்
பற்றிநின்றதேதடா பட்டநாதபட்டரே. (ருச)

நித்தலுமணிதுலக்கி நீடுமூலைபுக்கிருந்து
கத்தியேகதறியே கண்கண்மூடி யென்பயன்
எத்தனைபேரெண்ணினு மெட்டிரண்டுபத்தலோ
வத்தனுக்கேற்குமோ வறிவிலாதமாந்தரே. (ருரு)

பாங்கினோடுபத்மவா சனத்திருந்துபார்த்தனன்
ஓங்கிநாடிமேலிருந்தே யுச்சரிக்குமந்திரம்
மூங்கில்வெட்டிநாருரித்து மூச்சையோட்டியுண்டுநா
ணைந்தநூலிதொன்றுமே யறிந்துணர்ந்துகொண்மினே. (ருசு)

அருக்கனோடுசோமனு மதற்குமப்புறத்தினும்
நெருக்கியேறுதாரகை நெருங்குமோரகத்திலே
பரப்பிலாவெளியிலே பரத்தைநாடியூடுபோ
யிருக்கவல்லவர்க்கலோ வினிப்பிறப்பதில்லையே. (ருஎ)

ஆவதும்பரத்துளே யழிவதும்பரத்துளே
போவதும்பரத்துளே புகுவதும்பரத்துளே
தேவரும்பரத்துளே திசைகளும்பரத்துளே
யாவரும்பரத்துளே யியானும்பரத்துளே. (ருஅ)

எட்டிரண்டுகூடியே யிலிங்கமானதேவனை
மட்டதாகவும்முளே மதித்துநோக்கவல்லிரேற்
கட்டமானபிறவியின் கருத்தடல்கடக்கலா
மிட்டமானவெளியினோ டிசைந்திருப்பீர்காண்மினே. (ருகூ)

* ஏதடா தோன்றுகின்றிலைப்பெயர்.

உண்மையானமந்திர மொளியிலேயிருந்திடும்
தண்மையானமந்திரஞ் சமைந்துருபமாகியே
வெண்மையானமந்திரம் விளைந்துநீறதானதே
யுண்மையானமந்திரம தொன்றுமேசிவாயமே. (௯௦)

பன்னிரண்டுகால்நிருத்திப் பஞ்சவன்னமொத்திட
மின்னியவ்வெளிக்குணின்று வேரறுத்தமர்ந்தது
சென்னியாந்தலத்திலே சீவனின்றியங்கிடும்
பன்னியுன்னியாய்ந்தவர் பரப்பிரமமாவரே. (௯௧)

அச்சுவாயிலுச்சிமே லாயிரத்தலங்களாய்
முச்சுடருமூவிரண்டு மூண்டெழுந்ததீச்சுடர்
வச்சிரமதாகியே வளர்ந்துநின்றதெவ்விடம்
இச்சுடருமிந்திரியமு மேகமானதெங்கனே. (௯௨)

எளிதினங்குகாணலாகு மெம்பிரானிருப்பிடம்
அழிவிலாதுநின்றதே யகாரமுமுகாரமும்
குளிகையானசோதியுங் குலாவிநின்றதவ்விடம்
வெளியதாகுமொன்றிலே விளைந்ததேசிவாயமே. (௯௩)

ஆதியந்தமூலவிந்து நாதமைந்தெழுத்துமாய்
ஆதியந்தமூலவிந்து நாதமைந்துபூதமாய்
ஆதியந்தமூலவிந்து நாதமேவிநின்றதே
ஆதியந்தமூலவிந்து நாதமேசிவாயமே. (௯௪)

மூன்றிரண்டுமைந்துமாய் முயன்றெழுந்ததேவராய்
மூன்றிரண்டுமைந்ததாய் முயன்றதேயுலகெலாம்
ஈன்றதாயுமப்பனு மியங்குகின்றநாதமும்
தோன்றுமோரெழுத்திலே சொல்லவேறுமில்லையே. (௯௫)

அக்கரந்தவக்கரத்தி னுட்கரந்தவக்கரஞ்
சக்கரந்துசவ்வையுண்டு சம்புளத்திருந்ததீ
வெட்கரந்தவெண்ணெய்போல வெவ்வெழுத்துமெம்பிரா
னுட்கரந்துநின்றநேர்மை யாவர்காணவல்லிரே (௬௬)

ஒட்டெழுத்தின்வட்டமே லிருந்தபல்லியோனியும்
ஒட்டெழுத்தின்வட்டமன்றி நின்றதொன்றுங்கண்டிலேன்
ஒட்டெழுத்திரண்டுமே யிலங்குமாகுமாதலால்
ஒட்டெழுத்தின்வட்டமன்றி நேர்படாதீசனே (௬௭)

அரியுமாகியயனுமாகி யண்டமெண்டிசையுமாய்
பெரியனாகியுலகினிற் பெயர்ந்துபாதமொன்றலோ
வுருவுகண்டுவேறுசெய்து வேடமிட்டமூடரே
யுருவின்மூன்றுதேவர்தனு மொன்றதாகுமும்முனே (௬௮)

முத்திசித்திதொந்தமாய் முயங்குகின்றமூர்த்தியை
மற்றுதித்தவைம்புலன்க ளர்க்குமத்திமப்புலன்
அத்தர்நித்தர்காளகண்ட ரன்பினாலுறின்
முச்சரித்துளத்திலே யறிந்துணர்ந்துகொண்மினே (௬௯)

சுக்கிலத்துளியுளே சுரோணிதக்கருவுளே
முச்சதுரவாசலின் முளைத்தெழுந்தமோட்டினின்
மெச்சதுரமெய்யுளே விளங்குஞானதீபமா
யுச்சரித்தமந்திர மொன்றுமேசிவாயமே (௭௦)

வேணுமென்றஞானமும் விரும்புகின்றநூலிலே
தாணுவுண்டங்கென்கிறீர் தரிக்கிலீர்மறக்கிறீர்
தாணுவென்றமூலநாடி தன்னைநாடியும்முளே
காணுமன்றிவேறியாவுங் கண்மயக்கமொக்குமே (௭௧)

வழக்கிலேயுரைக்கிறீர் மனத்துளேதவிக்கிறீர்
உழக்கிலாதநாழியான வாறுபோலுமூன்மகாள்
உழக்குநாலுநாழியான வாறுமோலுமும்முளே
வழக்கிலேயுரைக்கிறீர் மனத்துளீசன்மன்னுமே. (எஉ)

உதித்தெழுந்ததெவ்விட மொடுங்குகின்றதெவ்விடம்
மதித்தஞானமெவ்விட மயங்குகின்றதெவ்விடங்
கதித்தசீவனெவ்விடங் கண்ணுறக்கமெவ்விடம்
விதிக்கவல்லஞானிகாள் விரித்துரைக்கவேண்டுமே. (எங)

அண்ணலாரனாதியா யனாதிமுன்னனாதியாய்ப்
பெண்ணுமாணுமொன்றலோ பிறப்பதற்குமுன்னெல்லாங்
கண்ணிலாணிசுக்கிலங் கருத்தொடுங்கினின்றபின்
மண்ணுளோரும்விண்ணுளோரும் வந்தவாறதெங்ஙனே. (எச)

நினைப்பதொன்றுங்கண்டிலே னீயலாதுவேறிலை
நினைப்புமாய்மறப்புமாகி நின்றமாயைமாய்கையே
யனைத்துமாயகண்டமா யனாதிமுன்னனாதியே
முனைக்குநானெனக்குநீ நினைக்குமவாறதெங்ஙனே. (எரு)

* அனுப்பிறந்தகண்டமா யகன்றவன்னியோனியாய்
மனுப்பிறந்துசெய்துவைத்த நூலினன்மயக்குவீர்
சனிப்பதேதுசாவதேது தாவரத்தினுட்பொரு
ணினைப்பதேதுநிற்பதேது நீருணர்ந்துகூறுமே. (எசு)

எத்திசைக்குமெவ்வுயிர்க்கு மெங்களப்பனெம்பிரான்
முத்திஞானவித்துளே முளைத்தெழுந்தசெஞ்சுடர்
சித்தினிற்றெளிந்தபோது தேவர்கோயிற்சேர்ந்தன
னத்தனுடல்கண்டபோ தடங்கியாடலுற்றதே. (எஎ)

* அணு- என்றும் பாடம்.

அங்கலிங்கபீடமும் மவைக்கண்மூன்றெழுத்தினுஞ்
சங்குசக்கரத்தினுந் தரித்தவெண்கரத்தினும்
பங்குகொண்டசோதியும் பரந்தவாயுவைந்தினுஞ்
சிங்கநாதவீணையுஞ் சிவாயமல்லதில்லையே. (௭௮)

நீளவீடுகட்டுவீர் நெடுங்கதவுசாத்துவீர்
வாழவேணுமென்றலோ மகிழ்ந்திருந்தமாந்தரே
காலனோலைவந்தபோது கைகலந்துநின்றிடும்
ஆலமுண்டகண்டராணை யம்மையாணையுண்மையே. (௭௯)

வீடெடுத்துவேள்விசெய்து மெய்யினோடுபொய்யுமாய்
மாடுமக்கள்பெண்டிர்சுற்ற மென்றிருந்தமாந்தர்கா
ளோடுபெற்றநம்பர்கையி னோலைவந்தழைத்தபோ
தாடுபெற்றவிலையதும் பெறாதுகாணிவ்வுடலமே. (௮௰)

ஓடமுள்ளபோதெலா மோடியேயுலாவலாம்
ஓடமுள்ளபோதெலா முறுதிபண்ணிக்கொள்ளலாம்
ஓடமுமுடைந்தபோ தொப்பிலாதவெளியிலே
ஓடமில்லைகோலுமில்லை யாருமில்லையானதே. (௮௧)

வல்லவாசலொன்பதும் மருத்தடைத்தவாசலுஞ்
சொல்லும்வாசலோரைந்துஞ் சொல்லவிம்மிநின்றதும்
நல்லவாசலைத்திறந்து ஞானவாசலூடுபோ
யெல்லைவாசல்கண்டபின் னினிப்பிறப்பதில்லையே. (௮௨)

ஆதியானதொன்றுமே யனேகரூபமாயமாய்க்
சாதிபேதமாயெழுந்து சர்வசீவனானபின்
ஆதியோடுகூடிமீண் டெழுந்துஜன்மமானபின்
சோதியானஞானியாருஞ் சுத்தமாயிருப்பரே. (௮௩)

மலர்ந்ததாதுமூலமாகி வையகமலர்ந்ததும்
மலர்ந்தபூகுவிந்தபோது மயக்கம்வந்தடுத்ததும்
புலன்களைந்துபொறிகலங்கிப் பூமிமேல்விழுந்ததும்
இனங்கலங்கிநின்றமாய மென்னமாயமீசனே. (அச)

வண்டுபூமணங்களோடு வந்திருந்ததேனெலாம்
உண்டுளேயடங்குவண்ண மோதுலிங்கமூலமாய்க்
கண்டுகண்டுவேரிலே கருத்தொடுங்கவல்லிரேற்
பண்டுகொண்டவல்வினை பறந்திடுஞ்சிவாயமே. (அரு)

ஓரெழுத்துலிங்கமாக வோதுமக்கரத்துளே
யோரெழுத்தியங்குகின்ற வுண்மையையறிகிலீர்
மூவெழுத்துமூவராய் முளைத்தெழுந்தசோதியை
நாவெழுத்துநாவுளே நவின்றதேசிவாயமே. (அசு)

தாரதாரதாரமுந் தொடர்ந்தெழுந்ததாரமும்
பாரபாரபாரமென்று பரித்திருந்தபாவிகாள்
நேரநேரநேரமு நினைத்திருக்கவல்லிரேல்
தாரதாரதாரமுந் தொடர்ந்துகூடலாகுமே. (அஎ)

குண்டலங்கள்பூண்டுநீர் குளங்கடோறுமூழ்கிறீர்
மண்டுகங்கள்போலநீர் மனத்தின்மாசறுக்கிலீர்
மண்டையேந்துங்கையரை மனத்திலேநினைத்தபோது
பண்டைமாலயன்றொழப் பணிந்துவாழலாகுமே. (அஅ)

நாடிநாடிநாதனை நயந்துபாருமும்முளே
யோடியோடிமீளுவாரை யும்முளேயடக்கிலீர்
தேடிமேவுகாலனுந் திகைத்துநின்றுபோய்விடுங்
கோடிகோடிகாலமுங் குறைவிலாதிருப்பிரே. (அகூ)

செய்யநீடுதெங்கிளநீர் சேர்ந்தகாரணங்கள்போ
லையனுள்வந்தேயென்னுள்ளம் புகுந்துகோயில்கொண்டனன்

மெய்யன்வந்துநெஞ்சில்வாழ்க வேண்டுமேயுரைத்தபின்
வையகத்துமாந்தர்முன்னே வாய்திறப்பதில்லையே. (க0)

பூதிபூசையென்றுநீர் பூசைசெய்யும்பேதைகாள்
பூதிபூசையென்னிலும் பூசைகொண்டதெவ்விடம்
ஆதிபூசைகொண்டதோ வனாதிபூசைகொண்டதோ
ஏதுபூசைகொண்டதோ வின்னதென்றியம்புவீர். (கக)

கூடுகட்டிமுட்டையிட்டுக் கொண்டிருந்தவாறுபோ
லாடிரண்டுகன்றையீன்ற வம்பலத்துளாடுதே
மாடுகொண்டுவெண்ணையுண்ணு மார்க்கட்ப்பசுக்களே
வீடுகண்டுகொண்டபின்பு வெட்டவெளியுங்காணுமே. (கஉ)

உடம்புயிரெடுத்ததோ யுயிருடம்பெடுத்ததோ
வுடம்புயிரெடுத்தபோ துருவமேதுசெப்பிடும்
உடம்பிறந்துபோய்விடு முயிரிறப்பதில்லையே
யுடம்புமெய்பிறந்ததான முண்மைஞானஞ்சொல்லடா. (கங)

உள்ளதோபிறப்பதோ வுயிர்ப்படங்கிநின்றிடம்
மெள்ளவந்துகிட்டநீர் வினவவேண்டுமென்கிறீ
ருள்ளதும்பிறப்பது மொத்தபோதுநாதமாங்
கள்ளவாசலைத்திறந்து காணவேண்டுமாந்தரே. (கச)

உயிரிருந்ததெவ்விட முடம்பெடுப்பதன்முனே
யுயிரதாவதேதடா வுடம்பதாவதேதடா
வுயிரையுமுடம்பையு மொன்றுவிப்பதேதடா
உயிரினாலுடம்பெடுத்த வுண்மைஞானஞ்சொல்லடா. (கரு)

உயிர்பரத்தினின்றிடு முடம்பெடுப்பதன்முனம்
உயிரகாரமாய்விடு முடம்பகாரமாய்விடும்

உயிரையுமுடம்பையு மொன்றுவிப்பதச்சிவம்
உயிரினாலுடம்பெடுத்த தொத்தவாறுகாண்மினே. (கூசு)

இல்லையைக்கடந்துநின்ற தெண்டனிட்டவாயுவி
னெல்லையைக்கடந்துபேர் யிமைப்பதுமறிவிரோ
இல்லையைக்கடந்துநின்ற செடிதலோகவெளியிலே
வெள்ளையுஞ்சிவப்புமாகி மெய்கலந்துநின்றதே. (கூஎ)

உருவுமல்லவெளியுமல்ல வொன்றதல்லநின்றதல்ல
பெரியதல்லசிறியதல்ல பேசலாவதொன்றதல்ல
மருவுவாசியுற்றகந்த மத்தநாடியுற்றதல்ல
வரியதாகநின்றநேர்மை யாவர்காணவல்லிரே. (கூஅ)

மந்திரங்கள்கற்கிறீர் மயங்குகின்றமாந்தரே,
மந்திரங்கள்கற்றநீர் மறித்தபோதுசொல்விரோ
மந்திரங்களும்முளே மதித்தநீறுமும்முளே
மந்திரங்களாவதும் மனத்திலைந்தெழுத்துமே. (கூகூ)

சங்கிரண்டுதாரையொன்று சன்னபின்னலானதும்
மங்கிமாண்டுலகெலா மாண்டலைந்துபோனதுஞ்
சங்கிரண்டையுந்திறந்து தாரையூதவல்லிரேற்
கொங்கைமங்கைபாகனோடு கூடிவாழலாகுமே. (க00)

எங்குமுள்ளவீசனா ரெம்புடற்புகுந்தபின்
பங்குகூறுபேசுவார் பாடுசென்றணுகிலார்
ரெங்கடெய்வமுங்கடெய்வ மென்றுபேதமுள்ளதோ
வுங்கள்பேதமன்றியந்த வுண்மைபேதமில்லையே. (க0க)

சிவவாக்கியர் பாடல் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# கபிலர் வரலாறு.

உக்கிரப்பெரு வழுதியார் காலத்திலே சோழியப் பிராமணனாகிய தெய்வத்தன்மைபொருந்திய பகவனென்பவராலே மனைவியாக ஏற்றுக்கொள்ளப்படுதற் பொருட்டுப் புலைக்குலத்தவ ளாகிய கருவூர் ஆதியென்பவள் அவருக்குச் செய்த உடம்படிக்கை வழுவாதிருக்கும்படி அவருக்குத் தானீன்ற பெண்பா னால்வர் ஆண்பான் மூவர் எனப்படுகின்ற எழு பிள்ளைகளையும் அசதி பிறந்த விடங்களிலே வைத்துவிட்டுச் சென்றுளாதலின் அப்போதுஅவ்வெழுவரிலே கடைப்பிள்ளையானது சோழநாட்டிலே திருவாரூ ரென்னும் பரிசுத்த சிவஸ்தலத்திலே ஈன்று வைக்கப்பட்டது. அவ்வூர் வேதியருள் சந்ததியின்றி வருந்தியிருந்த ஒருவர் அழகும் உருவும் அமைந்து விளங்கா நின்ற அப்பிள்ளையைக் கண்டு தனியிடத்துப் பொற்குடத்தைக்கண்ட வறியவன்போற் கண் களிகூர்ந்து எடுத்துக்கொண்டு போய்த் தன்மனைவிகையிலே கொடுத்துக் கபிலரென்று பெயரிட்டு வளர்த்தார். அந்தப்பிள்ளை தாய்தந்தைகளாலே பலமுயற்சிகளும் செய்து வளர்க்கப்பட்டு அறிவொழுக்கங்களிலே சிறந்து உபநயனத்திக்குத் தக்கபருவத்தை அடைந்தது. அப்பொழுது தந்தையார் மைந்தனுக்கு அச்சடங்கு செய்வித்தற்கு அவ்வூருள் வாழும் அந்தணரை அழைத்தார். அதற்கு அவர்கள் கூடி இப்பிள்ளை நம்மரபிலே பிறந்ததல்லாமையால் கூடாதென மறுத்துக் கூறினார்கள். அதுகேட்டுத் தந்தையார் மனங் கலங்கி நிற்கைகண்டு கபிலர் கடவுளது திருவருள் பெற்று அம்மறையவர் கூட்டத்துட் சென்று இந்த அகவல் பாடிக் கன்மத்தா லன்றிச் சென்மத்தாலே சாதி யென்பதொன்றில்லை யெனச்சித்தாந்தம் செய்தருளினார். பின்னர் அதுவே விதியாக அக்கபிலருக்கு உபநயனச் சடங்கு நிறை வேறியது.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கபிலரகவல்.

நான்முகன்படைத்த நானாவகையுலகில்
ஆன்றசிறப்பி னரும்பொருள்கூறுங்கால்
ஆண்முதிதோ பெண்முதிதோ வன்றியலிமுதிதோ
நாண்முதிதோ கோண்முதிதோ நல்வினைமுதிதோ தீவினைமுதிதோ
செல்வஞ்சிறப்போ வறிவுசிறப்போ
தொல்லைமாஞாலந் தோற்றமோபடைப்போ
எல்லாப்பிறப்பு மியற்கையோ செயற்கையோ
காலத்தாற்சாவரோ பொய்ச்சாவுசாவரோ
நஞ்சுறு தீவினை துஞ்சுமோ துஞ்சாதோ
துஞ்சும்போதந்தப் பஞ்சேந்திரியம்
என்செய்திருக்குமோ வெவ்விடத்தேகுமோ
ஆற்றலுடையீ ரருந்தவம்புரிந்தால்
வேற்றுடம்பாகுமோ தம்முடம்பாகுமோ
உண்டியையுண்குவ துடலோவுயிரோ
உலகத்தீரே யுலகத்தீரே
நாக்கடிப்பாக வாய்ப்பறையறைந்து
சாற்றக்கேண்மின் சாற்றக்கேண்மின்
மனிதர்க்குவயது நூறல்லதில்லை
ஐம்பதிரவி லகலுந்துயிலினால்
ஒட்டியவிளமையா லோரைந்துநீங்கும்

ஆக்கையிளமையி லைம்மூன்றுநீங்கும்
எழுபதுபோகநீக் கிருப்பனமுப்பதே

(அவற்றுள்)

இன்புறுநாளும் சிலவேயதாஅன்று
துன்புறுநாளுஞ் சிலவேயாதலால்
பெருக்காறொத்தது செல்வம்பெருக்காற்
றிடிகரையொத்த திளமையிடிகரை
வாழ்மரமொத்தது வாழ்நாளாதலால்
ஒன்றேசெய்யவும் வேண்டுமொன்றும்
நன்றேசெய்யவும் வேண்டுநன்றும்
இன்றேசெய்யவும் வேண்டுமின்றும்
இன்னேசெய்யவும் வேண்டுமின்னும்
நாளைநாளை யென்பீராகில்
நமனுடைமுறைநா ளாவதுமறியீர்
நம்முடைமுறைநா ளாவதுமறியீர்
எப்போதாயினுங் கூற்றுவன்வருவான்
அப்போதந்தக் கூற்றுவன்றன்னைப்
போற்றவும்போகான் பொருளொடும்போகான்
சாற்றவும்போகான் றமரொடும்போகான்
நல்லாரென்னா னல்குரவறியான்
தீயாரென்னான் செல்வரென்றுன்னான்
தரியாதொருகணந் தறுகணாளன்
உயிர்கொடுபோவா னுடல்கொடுபோகான்
ஏதுக்கழுவீர் ஏழைமாந்தர்காள்
உயிரினையிழந்தோ வுடலினையிழந்தோ
உயிரிழந்தழுதுமென் றோதுவீராகில்

உடலினையன்றலா இன்றுங்காண்கிலிர்
உயிரினையிழந்த உடலதுதன்னைக்
களவுகொண்ட கள்வனைப்போலக்
காலுமார்த்துக் கையுமார்த்துக்
கூறைகளைந்து கோவணங்கொளுவி
ஈமத்தீயை எரியெழமூட்டிப்
பொடிபடச்சுட்டுப் புனலிடைமூழ்கிப்
போய்த்தமரோடும் புந்திநைந்தழுவது
சலமெனப்படுவோ சதுரெனப்படுமோ
பார்ப்பனமாந்தர்காள் பகர்வதுகேண்மின்
இறந்தவராயுமை யிவ்விடையிருத்திப்
பாவனைமந்திரம் பலபடவுரைத்தே
உமக்கவர்புத்திர ரூட்டினபோது
அடுபசியாற்குலைந் தாங்கவர்மீண்டு
கையேந்திநிற்பது கண்டதார்புகலீர்
அருந்தியவுண்டியா லார்பசிகழிந்தது
ஓட்டியர்மிலேச்ச ரூணர்சிங்களர்
இட்டிடைச்சோனகர் யவனர்சீனத்தர்
பற்பலர்நாட்டிலும் பார்ப்பாரிலையால்
முற்படைப்பதனில்வே றாகியமுறைபோல்
நால்வகைச்சாதியிந் நாட்டினினாட்டினீர்
மேல்வகைகீழ்வகை விளங்குவதொழுக்கால்
பெற்றமுமெருமையும் பிறப்பினில்வேறே
அவ்விருசாதியி லாண்பெண்மாறிக்
கலந்துகருப்பெறல் கண்டதுண்டோ
ஒருவகைச்சாதியா மக்கட்பிறப்பிலீ
ரிருவகையாகநீ ரியம்பியகுலத்து

ஆண்பெண்மாறி அணைதலுமணைந்தபின்
கருப்பொறையுயிர்ப்பதுங் காண்கின்றிலீரோ
எந்நிலத்தெந்தவித் திடப்படுகின்றதோ
அந்நிலத்தந்தவித் தங்குரித்திடுமலால்
மாறிவேறாகும் வழக்கமொன்றிலையே
பூசுரர்ப்புணர்ந்து புலைச்சியரீன்ற
புத்திரராயினோர் பூசுரரல்லரோ
பெற்றமுமெருமையும் பேதமாய்த்தோன்றல்போல்
மாந்தரிற்பேதமாம் வடிவெவர்கண்டுளார்
வாழ்நாளுறுப்புமெய் வண்ணமோட்டிவினில்
வேற்றுமையாவதும் வெளிப்பட்டின்றே
தென்றிசைப்புலையன் வடதிசைக்கேகிற்
பழுதறவோதிப் பார்ப்பானுவான்
வடதிசைப்பார்ப்பான் றென்றிசைக்கேகின்
நடையதுகோணிப் புலையனுவான்

(அதுநிற்க)

சேற்றிற்பிறந்த செங்கழுநீர்போலப்
பிரமற்குக்கூத்திவயிற்றிற் பிறந்தவசிட்டரும்
வசிட்டர்க்குச்சண்டாளி வயிற்றிற்பிறந்தசத்தியரும்
சத்தியர்க்குப்புலைச்சிதோள் சேர்ந்துபிறந்தபராசரரும்
பராசரருக்குமீன்வாணிச்சி வயிற்றிற்பிறந்தவியாசரும்

(இந்நால்வரும்)

வேதங்களோதி மேன்மைப்பட்டு
மாதவராகி வயங்கினரன்றோ
அருந்தவமாமுனி யாம்பகவற்கு

கருவூர்ப்பெரும்பதிக் கட்பெரும்புலைச்சி
ஆதிவயிற்றினி லன்றவதரித்த
கான்முளையாகிய கபிலனும்யானே
என்னுடன்பிறந்தவ ரெத்தனைபேரெனில்
ஆண்பான்மூவர் பெண்பானால்வர்
யாம்வளர்திறஞ்சிறி தியம்புவல்கேண்மின்
ஊற்றுக்காடெனு மூர்தனிற்றங்கியே
வண்ணாரகத்தில் உப்பைவளர்ந்தனள்
காவிரிப்பூம்பட்டினத்திற் கள்விலைஞர்சேரியில்
சான்றாரகந்தனில் உறுவைவளர்ந்தனள்
நரப்புக்கருவியோர் நண்ணிடுசேரியில்
பாணரகத்தில் ஔவைவளர்ந்தனள்
குறவர்கோமான் கோய்தினைப்புனஞ்சூழ்
வண்மலைச்சாரலில் வள்ளிவளர்ந்தனள்
தொண்டைமண்டலத்தில் வண்டமிழ்மயிலைப்
பறையரிடத்தில் வள்ளுவர்வளர்ந்தனர்
அரும்பார்சோலைச் சுரும்பார்வஞ்சி
அதிகனில்லிடை அதிகமான்வளர்ந்தனன்
பாரூர்நீர்நாட் டாரூர்தன்னில்
அந்தணர்வளர்க்க யானும்வளர்ந்தேன்

(ஆதலால்)

மாரிதான்சிலரை வரைந்துபெய்யுமோ
காற்றுஞ்சிலரை நீக்கிவீசுமோ
மாநிலஞ்சுமக்க மாட்டேனென்னுமோ
கதிரோன்சிலரைக் காயேனென்னுமோ
வாழ்நான்குசாதிக் குணவுநாட்டிலும்

கீழ்நான்குசாதிக் குணவுகாட்டிலுமோ
திருவும்வறுமையுஞ் செய்தவப்பேறும்
சாவதும்வேறிலை தரணியோர்க்கே
குலமுமொன்றே குடியுமொன்றே
இறப்புமொன்றே பிறப்புமொன்றே
வழிபடுதெய்வமு மொன்றேயாதலால்
முன்னோருரைத்த மொழிதவறாமல்
எந்நாளாயினு மிரப்பவர்க்கிட்டுப்
புலையுங்கொலையுங் களவுந்தவிர்த்து
நிலைபெறவறத்தி னிற்பதையறிந்து
ஆணும்பெண்ணு மல்லதையுணர்ந்து
பேணியுரைப்பது பிழையெனப்படாது
சிறப்புஞ்சீலமு மல்லது
பிறப்புநலந்தருமோ பேதையீரே.

கபிலரகவல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பெண்பாலுவரும், ஆண்பாலு மூவருமாகிய ஏழுபிள்ளை களையும் பிறந்தவிடங்களிலேவைத்துவிட்டு ஆதியும் பகவனும் அப்புறம் போம்போது ஆதியானவள் அப்பிள்ளைகளைநோக்கி இந்தப் பிள்ளைகளை யாவர்காப்பாற்றுவாரென்று இரங்கிக் காலெழாது நிற்க அப்போது அவள் மனவருத்தம் திரும்புடி அக்குழந்தைகள் கடவு ளருளினாலே உண்மை தெரிந்துசொல்லிய பாடல்கள்.

## வெண்பா.

### உப்பை.

கண்ணுழையாக் காட்டிற்கமூண்மரத்துக்கும்
உண்ணும்படி தண்ணீருட்டுவார் - எண்ணும்
நமக்கும்படியளப்பார் நாரியோர்பாகர்
தமக்குந்தொழிலேது தான். (௧)

### ஔவை.

எவ்வுயிருங்காப்பதற்கோ ரீசனுண்டோவில்லையோ
அவ்வுயிரில்யானுமொன்றிங் கல்லேனோ - வவ்வி
அருகுவது கொண்டிங்கலைவானேன்னன்னாய்
வருகுவதுதானே வரும். (௨)

### உறுவை.

சண்டப்பைக் குள்ளுயிர்தன் றுயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்ப தாச்சரியம் - மண்டி
அலைகின்றவன்னை யரனிடத்திலுண்மை
நிலைகண்டு நீயறிந்துநில். (௩)

### வள்ளி.

அன்னைவயிற்றி லருத்திவளர்த்தவன்றான்
இன்னம்வளர்க்கானோ வென்றாயே - மின்னரவம்
சூடும்பெருமான் சுருதிமுடி விலிருந்
தாடும்பெருமானவன். (௪)

### அதிகமான்.

இட்டமுடனென்றலையி லின்னவகையென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்து விட்டானோ
முட்டமுட்டப்பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்றாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ. (௫)

### திருவள்ளுவர்.

கருப்பையுண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்கு மெய்யன் - உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானோ வோகெடுவாயன்னாய்கேள்
வாட்டமுனக்கேன்மகிழ். (௬)

### கபிலர்.

கெர்ப்பமுதலின்றளவுங் கேடுவாராமற்காத்
தப்புடனே யன்னமளித்திட்டோன் - தப்பித்துப்
போனானோகண்டயிலைப்புக்கானோ நின்மனம்போல்
ஆனானோவன்னையறை. (௭)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சர்வம்சின்மயம்.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்

# புத்தகவிளம்பரம்.

இப்புத்தகமும் இலக்கண இலக்கிய நூற்றிரட்டுபுத்தகமும் அத்
தொய்த சாஸ்திரத்திரட்டு முதற்புத்தகமும், இரண்டாம்புத்தகமும்,
மூன்றாம்புத்தகமும், நான்காம்புத்தகமும், ஐந்தாம்புத்தகமும், இன்
னும் பல வேதாந்தசாஸ்திரங்களும், கருமம் பத்தி யோகத்துக்குரிய
நூல்களும் வேண்டியவர்கள் சென்னபட்டணம் முத்தியாலுப்பேட்
டை புஷ்பக்காரவீதியில் கும - பெரி - கடையிலும், ராம - மு -
கடையிலும், சிதம்பரம் கீழவீதி ஸ்ரீமத் மு - சதா - சதாசிவ தீக்ஷி
தசுவாமி யவாளிடத்திலும், தஞ்சாவூர் வடுகத்தெரு ம - ள - ள - ஸ்ரீ
ந - வீரபத்திரபிள்ளை யவர்களிடத்திலும், மதுரை புதுமண்டபம் புத்
தகவியாபாரம் ம - ள - ள - ஸ்ரீ சண்முகம்பிள்ளை யவர்களிடத்தி
லும், திருநெல்வேலி மேலரதவீதி டி - எஸ் - ம - ள - ள - ஸ்ரீ சிவராம
பிள்ளை யவர்களிடத்திலும், ஆழ்வார்திருநகரியை யடுத்த காந்தீஸ்
வர மடாலயத்தில் சொக்கலிங்க சுவாமி யவர்களிடத்திலுங் கிரயத்
துக்குப்பெற்றுக்கொள்ளலாம்.